உ
சிவமயம்
அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

# அகத்தியம் - உரைநூல்

இந்நூல் ஆசிரியர் :

"தமிழ் வேதநாவலர்", "வைத்தியமணி"
முத்தமிழ் வேதத் திருச்சபை
**சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை**
தேவகோட்டை

நிறுவுனர்
**முத்தமிழ் வேதத் திருச்சபை**
*தேவகோட்டை - 630 302.*

*வெளியீடு*
**முத்தமிழ் வேதத் திருச்சபை**
*வ.பெரி.மு. தெரு, தேவகோட்டை - 630 302.*

உ
*சிவமயம்*

*அரிஓம் நன்றுக குருவாழ்க குருவே துணை*


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகத்தியம் – உரை நூல் |
| முதலாம் பதிப்பு | : | பிலவ வருடம் தை மாதம் 20ம் தேதி (2-2-2022) |
| நூலாசிரியர் | : | சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை |
| உரிமை | : | முத்தமிழ் வேதத் திருச்சபையோர், தேவகோட்டை. |
| பக்கங்கள் | : | 64 |
| வெளியீடு | : | முத்தமிழ் வேதத் திருச்சபையார், தேவகோட்டை. |
| தாள் | : | 21.3 கிலோ மாப்லித்தோ |
| நூலின் அளவு | : | டெமி 1/8 |
| விலை | : | **ரூ. 51/-** |
| எழுத்து | : | 14 புள்ளி |
| கிடைக்குமிடம் | : | **இராம. ஆதிரெத்தினம்**<br>இணைச் செயலாளர், முத்தமிழ் வேதத் திருச்சபை<br>19, ரெகுநாதபுரம் மேற்கு, தேவகோட்டை.<br>செல் : 9486361107 |
| கணினி &<br>அச்சு அமைப்பு | : | **ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ்**<br>கோயமுத்தூர் - 641 007.<br>செல் : 9361410269<br>email : sribalajigraphics.cbe@gmail.com |

உ
சிவமயம்

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

# அகத்தியம் - உரைநூல் முன்னுரை

எம் ஞானத்தெளிவு குருவின் திருவடி உச்சிமேற் கொண்டு அகத்தியம் – உரை நூலிற்கு முன்னுரை எழுதுவோமாக.

நம் முன்னேர்கள் முனிவர்ககள், இருடிகள், சித்தர்கள் ஞானியர்கள், சாதுக்கள், பெரியோர்கள், ஆக்கித் தந்த நூல்கள் பலபல. கலியுகத்தில் அவதரித்த மாதா மகிழவரு சற்புத்திர–மார்க்கமாய்ச் சித்தர் தவமுதல்வர் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் ஆகிய முருகப் பெருமான் அருளிய தேவாரத்திலும், முதிர்விற் பழுத்த முதுபழமொழியாய்ப் பிதாவருள் கட்டளை பேறுடைத் தகைமை பெறு தாசமார்க்கப் பெரியோராகிய திருநாவுக்கரசராகிய வாகீசர் அருளிய தேவாரத்திலும், உள்ளம் உடையான் உணர்த்தும் மொழியை வாழ்சக மொழியாய் வழங்க வழங்கும் குருவருள் பெற்றுக் குவலயத்தோர்யெனச் சகமார்க்கத்துறு தவசி மொழியாகிய சுந்தரர் ஆகிய திருமால் அருளிய தேவாரத்திலும் மூலமுதல் குரு ஆகமச் செம்மல் விளைவறி சித்தர் திருமூலர் அருளிய திருமந்திரம் ஆகிய ஆகமத்திலும், அண்டமதனினின்ற சரீரியாய்த் தெய்வ திருவருள் செய நல்லருள் மொழிப் பேறு கொள்ளும் பெருந்தகையாளராய்ச் சன்மார்க்கம் பெறு சாதுமொழியாய் மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார் நூல்களிலும் தமிழே சிவமாய் தழைவுற்ரோங்கும் என்ற அதிசூக்குமத்தை உணர்த்தி அருளியுள்ளார்கள். மாணிக்கவாசகர், திருமூலர் காலம் துவாபரயுகம் என யூகிக்கப்படுகிறது. திருஞானசம்பந்தர் கால நிர்ணய விளக்கத்தில் மூவருடைய அவதாரப்பூர்வம் நிறைவு பெற்றுள்ளது என்பதை மகிழ்வுடன் அறிவிக்கின்றேன்.

மூலமுதல் குரு திருமூலர் அருளிய காமிக ஆகமம் இரண்டாம் தந்திரத்தில் ஆருவது உட்பிரிவு அகத்தியம் இயம்பும் திருமந்திரம்

நடுவுநில் லாதுஇவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன வீச
னடுவுள வங்கி யகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னீரென் ருனே.

அங்கி யுதயம் வளர்க்கு மகத்திய
னங்கி யுதயங்செய் மேல்பா லவனேடு
மங்கி யுதயஞ்செய் வடபாற் றவமுனி
யெங்கும் வளங்கொள் ளிலங்கொளி தானே.

மூலமுதல் குரு திருமூலர் வழி வந்த எம் ஞானத்தெளிவு குரு இல்லற ஞானியாகிய உயர்மேதை தமிழ்வேத நாவலர் வைத்தியமணி சித.வே. சண்முகநாத பிள்ளை அவர்கள் உலகுக்கு கலியின் கொடுமை தீர ஆக்கித் தந்த நூல்கள் பல. அவற்றுள் அகத்தியத்திற்கு உரை செய்துள்ளதை வெளியிடுவதற்கு இறை அருளும் குரு அருளும் கூட்டுவித்திருக்கிறது.

இப்பொழுது தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில்

**அகத்தெழு வளியிசை அரில்தப நாடின்
அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே.**

என்று தொல்காப்பியர் இயம்புகிருர்.

கலியின் கொடுமை தீர அவதரித்த உயர்மேதை எம் ஞானத் தெளிவு குரு அகத்திய உரையில் சிவராஜயோகம் தன்னில் நிலைத்து ஒலிக் கூட்டங்களை முறைமைபடுத்த அகத்தின் இயமாம் அகத்தியத்தை உணர்ந்து கண்டவாறு உரைக்கப் பெறுகிறது.

**வெளியும் அதில் வளியும் தோன்ற ஏற்படுவதே ஒலி** அகத்தியம் எழுத்திலக்கணம், அவ்வெழுத்தின் வரிவடிவ இலக்கணம் அவ்வெழுத்தின் ஒலி வடிவ இலக்கணம் மூன்றும் கூறுகிருர்கள். கலை சூரியன், சந்திரன், அக்னி என்கின்ற மூன்ருகவே அமைவு பெற்றிருப்பதால் அவ்வாறே கலாந்தமும் மூன்ருய் அமைவு பெற்றுள்ளது என்று விளக்கி அகத்திய உரை கூறியுள்ளார்கள்.

உ
*சிவமயம்*

திருவைந்தெழுத்து நமசிவய. உயிர் **அ** நாதம் **இ** விந்து **உ**. எ,ஒ, கலை. ஐ,ஒ கலாதி. ஆ,ஈ,ஊ,ஏ, ஓ ஐந்து உயிர் நெடிலுடன் கலாதியைச் சேர்த்து ஏழு நெடில் எழுத்தும் பூதிய எழுத்து. திருவைந்தெழுத்து தனித்து நிற்கும் போது உயிர், நாதம், விந்து, கலை ஆகிய ஐந்தும் பூத எழுத்து என்றும் இவற்றின் நெட்டெழுத்தாகிய ஆ,ஈ,ஊ,ஏ,ஓ உடன் கலாதியாகிய ஐ,ஔ சேரப் பூதிய எழுத்து என்றும் சொல்லப் பெறும்.

நம் முன்னோர்களில் பேரன் பேத்திகளுக்கு எளிமையாக போதிக்க நூல்கள் தந்த என் உள்ளம் கவர்ந்த **ஔவையார்** அவர்கள் அருளி செய்த ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், நல்வழி, மூதுரை அமிர்தமாகும். அந்த அமிர்தத்தில் கொன்றை வேந்தன் நூலில்

**எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்** என்றும் வெற்றிவேற்கை என்னும் நறுந்தொகை ஆக்கிய அதிவீர ராமபாண்டியர் நூலில் **எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்** என்றும் நம் முன்னோர்கள் இயம்பியதை நிரூபித்துக் காட்டியுள்ளார்கள். மேலும் தெளிவுபெற **அகத்தியம்** மூல நூலை நோக்குக.

**உந்திச் சுழியின் உடனேர் பிராணனை**
**சிந்தித் தெழுப்பி சிவமந் திரத்தினால்**
**முந்தி முகட்டில் நிறுத்தி அபானனை**
**சிந்தித் தெழுப்ப சிவனவன் ஆமே.**

என்றபடி செம்மொழியாகிய தமிழே சிவமாய்த் தழைவுற்றோங்கும் என்ற அதி சூக்குமத்தை உலகிற்கு கலியின் கொடுமை தீர அகத்திய உரையில் நிரூபித்து காட்டியுள்ள அற்புதம் இனிமையாகும். அந்த இனிமையை நாம் அடைய வாசித்து வாசித்து வாழ்வாங்கு வாழ முடிவில்லா மோனநிலையை அடைய சோராத சுகத்தை அடைந்து சிவன் அவன் ஆம் என்ற நிலை எட்ட ஆக்கியது இந்நூல்.

இந்நூல் வெளிவர எம் ஞானத்தெளிவு குருவின் நல்ஆசி பெற்ற சிவ புண்ணிய சீல சிவனடியார் மு. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தவப்புதல்வர் சிரஞ்சீவி கனடா டாக்டர் சித. ஏகப்பன் அவர்களிடம் கொடுத்து வைத்திருந்த **அகத்தியம் உரை** நூலை வெளியிட கனிந்த அன்புள்ளம் கொண்டு உலக மக்கள் ஒலி, ஒளியுடன் வாழ ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ் சோதியோடு வாழ இது சமயம் இந்த ஆண்டு (2022) விழாவில் வெளி வருகிறது. சிரஞ்சீவி கனடா டாக்டர் சித. ஏகப்பன் அவர்கள் அவர்தம் துணைவியார் டாக்டர் முத்துலெட்சுமி ஏகப்பன் அவர்கள் இவ்வுலகிற்கு கலியின் கொடுமைகளை தீர்க்க உயர்மேதையாகிய ஞானத்தெளிவு குரு இயற்றிய அனைத்து நூல்களையும் வெளியிட்டு அனைத்து சிவபுண்ணியத்தை சேர்த்துக் கொண்டு பரம்பரையே நீடூழி வாழ சைவ சித்தாந்த பெரியோர்கள் செய்த தொண்டு மிளிர இருள் நீங்கி ஒளி வீசக் கிடைத்த வாய்ப்பை முழுதும் பயன்படுத்திக் கொண்டுள்ளார்கள். அவர் தம் நகரத்தார் பரம்பரையே நீடூழி வாழ வாழ்த்தும் முத்தமிழ் வேதத் திருச்சபையோர்.

என்றும் நிலையான தமிழ் எழுத்துக்களைக் கொண்டு அச்சு பதிக்கும் முருக பக்தர் முருகன் அடிமையாகிய ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ் குடும்பத்தாருக்கும் முத்தமிழ் வேதத் திருச்சபையோர் மனம் கனிந்த நன்றியை தெரிவித்து நீடூழி வாழ வாழ்த்துகிறோம்.

**அகத்தியம் உரை** நூலிற்கு முன்னுரை எழுத எம் ஞானத்தெளிவு குருவின் அடிமையாகிய எனக்கு உள்நின்று உணர்த்த உணர்ந்ததை உலகம் உய்ய 27-12-2021 அன்று மார்கழி மாதம் 12ஆம் தேதி திங்கள்கிழமை மார்கழி அஷ்டமி பிரதட்சணம் அன்று காலை 5.00 மணிக்கு ஆரம்பித்து 7.00 மணிக்கு நிறைவாக எழுதி உத்தமர்களாக வாழ ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ் சோதியை நாடி தனிப்பெருங் கருணையில் வாழ வேண்டி நிறைவு செய்கிறோம்.

இவண்

**இராம. ஆதிரெத்தினம்**

இணை செயலாளர்

முத்தமிழ் வேதத் திருச்சபை

உ
*சிவமயம்*
அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

# எம் ஞானத்தெளிவு குரு எழுதிய அகத்தியம் உரைநூல்

## காப்பு

நிலவணி மௌலியும் நெற்றிமேற் கண்ணும்
பலநுகர் அங்கையும் பாசாங் குசமும்
குலவரை ஏடாய்க் குறித்த கூர்ங்கோடும்
துலங்கும் விநாயகன் றூய்தாள் துணையே.

ஒலிக்கூட்டங்களை முறைமைப்படுத்த அகத்தின் இயமாம் அகத்தியத்தை உணர்ந்து கண்டவாறு உரைக்கப் பெறுகிறது. வெளியும் அதில் வளியும் தோன்ற ஏற்படுவதே ஒலி.

**ஒலி என்ற சொல்லுக்கு விளக்கம் :**

ஒகரம் ஆகாயத்தைக் குறிக்கும். ஆகாயத்தில் தோன்றும் கால் ரகரமாகும். அந்த ரகரம் லகரமாகத் திரியும். அந்த லகரம் நாத எழுத்தாகிய இகரத்தோடு கூடி **லி** என்ருகும். இப்படியாக ஒலி என்ற சொல் பிறக்கிறது. ஆகவே ஒலியென்ற சொல் முன் கூறியவாறு வெளியிற்ரேன்றி சலனஞ் செய்யும் வளியைக் குறிக்கிறது. இவ்வாறு புறவெளியிற்ரேன்றும் ஒலிக்கூட்டங்களை நாம் அகப்படுத்தி கூற முடியாதாகையாலும் அப்புற வெளியிலுள்ளவாறே அக வெளிலும் அனைத்தையும் காணலாமாகையாலும் அது தான் நாம் வழங்குதற்கு ஏற்புடைத்தாகையாலும் அவ்வாறே காட்டுகிரேம். காண்க.

நம் அகத்தெழும் வளியானது மூலமுதல் நாதாந்தம் ஈருக உள்ள ஏழு நிலையங்களைச் சார்ந்து ஆறு ஆதாரங்களிற் பொருந்தி நடப்பதால் முற்கூறிய ஒலி எழுத்துருவம் பெறுகிறது. மூலமுதல் நாதாந்தம் ஈருய் உள்ள ஏழு அத்துக்களுக்கு புறம்பாய் எவ்வித ஒலியும் ஒலிக்க முடியாதாகையாலும் இவ்வேழு அத்துக்கு உட்பட்டு பிறக்கும் ஒலி கூட்டம் எழுத்து என்ற பெயருடையதாய் ஒலி உருவமாக விளங்குகிறது,

அவ்வெழுத்தாலாகிய சொற் கூட்டத்தின் எல்லையும் ஏழு அத்துக்கு உட்பட்டதாகவே இருக்கின்றன. இவ்வாறு புறவெளியில் தோன்றுகின்ற தோற்றங்கள் எண்ணிறைந்–தனவாக தோன்றினுலும் கதிரவன் முதல் கதிர்மகன் (சனி) ஈருகத் தோன்றும் தோற்ற உறழ்ச்சி தொகுதியே அகிலத்துக்கும் லிபியாமாறு காண்க (லிபி = எழுத்து) ஈண்டு ஒலித்–தோற்றத்தையும் அவ்வொலியாலாகிய எழுத்தின் தோற்றத்தையும் அகவெளியிலும் புறவெளியிலும் காட்டினமையைக் கூர்ந்து நோக்குக. நம் அகமாகிய இல்லில் உள்ளவாறு பிற்பட்ட புற வெளியிற் ருேன்றலால் இலிபி என்ற பெயருடைதாயிற்று. ஒலியின் வகையை இதுகாறும் கூறினேம். அதன் தொகையையும் காட்டுகிருேம் காண்க.

மூலாதாரத்தில் நான்கும், சுவாதிஷ்ட்டானத்தில் ஆறும், மணிபூரகத்தில் பத்தும், அனுகதத்தில் பன்னிரெண்டும், விசுத்தியில் பதினுறும், ஆக்ஞையில் இரண்டும், நாதாந்தத்தில் ஒன்றும் ஆக முறையே இவற்றிற்கு அடிப்படை, மனே (உள்) முற்றம், உள்மனே, புலேக்கடை, முச்சந்தி, பெருந்துறை என்று தமிழில் வழங்கப் பெறும்.

அமையும் வண்ணம் காலாகிய வ ஆக்கலால் வாக்கு ஐம்பத்தொன்று வகை ஆயின. (காலுக்கு வகரத்தை போடுதலின் உண்மையானது – கால் (காற்று) வாயுவின் எழுத்தாம் வகரம் வாக்குளேந்து (இயற்கையாக) உள்ளே பிறத்தலுக்கு தான் வாக்கு என்றது) இவையே மொழி முதற் காரணம்.

மொழி முதற் காரணமாகிய வாக்குகள் திறின் தோற்றுவாய் விளக்கம் வருமாறு.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மூலாதாரம் | - | 4 | - | ச | - | க், க்க, ங்க, ங்கெ |
| சுவாதிட்டானம் | - | 6 | - | சா | - | ச, ச்ச, ஞ்ச, ஞ்செ, ங, ஞ |
| மணிபூரகம் | - | 10 | - | ധ | - | ட, ட்ட, ண்ட, ண்டெ, த, த்த, ந்த, ந்தெ, ண, ந |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| அநாகதம் | - | 12 | - | ௰௨ | - | ப, ப்ப, ம்ப, ம்பெ, ம, ய, ர, ல, வ, ழ, ள, ற |
| விசுத்தி | - | 16 | - | ௰௬ | - | அ, ஆ, இ, ஈ, உ, ஊ, க்ரு, க்ரூ, க்லு, க்லூ, ஏ, ஐ, ஓ, ஔ, அம், அஃக. |
| ஆக்ஞை | - | 2 | - | ௨ | - | எ, ஒ |
| நாதாந்தம் | - | 1 | - | ௧ | - | ன |

(முடிந்த எழுத்து ஒகரம் ஆதாரங்களுக்கு சார்பை கொடுப்பது)

இவைகள் ஆறு நிலையங்களிலும், முறையே முக்கல், மூச்சுவிடல், அதட்டல், மன எழுச்சிப் பிதற்றொலி, பொறிவாய் உறழ்ச்சி மனோநிலை ஒலி, மெல்லொலி, மத்திம ஒலி, வல் ஒலி ஆகத் தோன்றி மேற்கூறிய ஐம்பத்தொன்றுய் உருப்பெறும். அவைகள் அதன் ஆறுதாரச் சார்பாகிய ஏழு நிலையங்களின் வடிவைக் கொண்டு எழுத்தாகும் போது அகரம் முதல் ன கரம் ஈருக அமையப் பெறும் வரையறையாகிய அத்தில் துவம் என்னும் தோற்ற நிலைப்பேறு அடைகின்றபடியால் சித்தாந்த நூலில் அன்னத்துவா எனப் பெயர் பெறும் (துவம் = தோன்றி நிலை பெறுதல்).

ஒலிக் கூட்டங்களுக்கு ஏழு அத்தாகிய எழுத்தென்னும் ஆறுதார நிலைய சார்பின் உருவ அமைதி விளக்கம்,

◯ மூலாதாரம் – முகவாய் | □ சுவாதிட்டானம் – வாய்

◡ மணிபூரகம் – நாக்கு | △ அநாகதம் – மூக்கு

⬡ விசுத்தி – கண் | ◎ ஆக்ஞை – காது

) ரவி – சூரியன் | ( மதி – சந்திரன்

மூலமுதல் நாதாந்தம் ஈருகிய தோன்றும் எழுத்தாகிய க முதல் ன ஈருக அதன் வாக்காகத் தோன்றுவதால் தற்குறி என்றும் பெயர்.

ஈண்டு ஒலி என்ருல் என்ன என்ற விளக்கமும் எழுத்து என்ருல் என்ன என்பதற்குரிய விளக்கமும் அகத்திற் காண்பது போன்று புறத்திற் காணப் பெறும் போது அவைகள் யாதாய் விளங்குகின்றன அவற்றின் பெயர் எவ்வாறு வழங்கப் பெறுகின்ற தென்ற விளக்கமும் வகுத்துக்காட்டிய வகையின் விரிவுபடுகின்ற தொகை எத்தனே என்ற விளக்கமும் அவற்றிற்குரிய நிலேய பேதங்களின் குறிப்பும் அதன் தொகையும் அவற்றின் பொதுப் பெயரும் அவற்றின் பொது உருவக் குறிப்பும் அவைகளே அனுபூதி சாதன இயலின்படி ஆக்கும் கலேயில் எவ்வாறு வழங்கப் பெறுகிற தென்ற குறிப்பு நுணுக்கப் பெயரும் கூறினேம். இதுவரை கூறப் பெற்றன யாவும் மொழிப் பாகுபாடுகளுக்கு உட்படாமல் மொழி முதற் காரணமாய் நின்ற ஒலிப் பொதுக்குறிப்பாம் என்றுணர்க.

**மொழி முதற்காரண ஒலி பொதுக் குறிப்பின் சிறப்பு**

முற்கூறிய யாவும் இயற்கை விளேவின் நிகழ்ச்சி ஆகையாலும், அந்நிகழ்ச்சிகள் மனோநிலே செயற்பாட்டின் உட்படா இயற்கையது ஆகையாலும் மனமே ஆன்ம ஞானத்திற்கு எதிர் மறைப் பொருள் ஆகையாலும் அந்த மனம் செயலிழந்த இடத்து தோன்றும்படியாக **வ** கரம் மாகிய வாசியை முதற்பொருள்ஆக்கி வைக்கும் வாக்காக இருப்பதால் அதற்கு ஒரு தனிப் பெரும் சிறப்பு இருப்பதைக் காட்டுகிறோம் காண்க.

முற்கூறிய ஆருதார சார்பு நிலேய வடிவின் தோற்றம் முதற் பொருளாலேயே உண்டாக்கப் பெற்றுள்ளது. அவைகளின் உருவ வடிவத்தை விளக்கமாக கூறியிருக்கிறோம். அதை உணர்பவர்கள் உயிர்க்கணங்களுக்கு உயிர் முதற் பொருள் ஆக்கி வைத்த விதி எழுத்தையும் உணரலாம். அதற்குதான் ரேகை என்று பெயர். ரேகை என்ற சொல்லின் விளக்கம்.

இ ய ர ஏ க ஐ என்றவற்றின் தொடர்பே இரேகை என்ருயிற்று. இயம் = ஒலி, ர = அந்த ஒலியால் நடத்தப் பெறும்

காலாகிய வளி. ஏக = அதை செலுத்தும்படியாக உள்ள, ஐ = தலைவன். அதன் குறிப்பே இரேகை. ஆகவே இரேகை என்பது இறைவனுடைய குறிப்பெழுத்து என்பதாம். இது தவிர வேறு வகைப்பட்ட குறியீடாகிய ரேகைகளும் காணப் பெறுகிறதே என்று ஐயுறல் வேண்டாம். வடிவெழுத்தும் தன்மை எழுத்தும் சார்பெழுத்தும் உள்ளன போன்று ரேகையிலும் வடிவம் தன்மை சார்பு என்பன உண்டாம் என்றுணர்க.

முற்கூறிய ஒலிக்கூட்டத் தொகுதிகள் அனைத்தும் ஏழு அத்துக்கு உட்பட்டு தோன்றும் எழுத்தாக இருப்பினும் அதை அந்தந்த நிலையங்களிலும் நடைபெறச் செய்யும் தன்மையுடையதாகிய முதற்பொருள் எல்லாவற்றிற்கும் ஆதியாயும் அந்தமாயும் இரண்டு வகையாகி ஒன்பதாகும். புறத்திலும் அவ்வாறே கோள்கள் ஒன்பதாகும். எழுத்திலும் நாத விந்து ஆகிய உறுப்பைக் கொண்டு ஒன்பதாகும். அவ்வாறு முற்கூறிய ரேகையிலும் உயிரும் உடம்பும் என இரண்டாகி ஒன்பதாகும். இதினின்று தோன்றிய விரியே இரேகை சாத்திரமாகும். அதை வேறிடத்தில் விரித்துக் கூறுகிறோம். இவ்வாறு பெரும் சிறப்பு வாய்ந்த இரேகையானது கரத்தில் நோயுறினும் சிதைவுறினும் அழிந்து போங் காலத்திலும் இல்லாமற் போய் விடுகிறது. அதனால் அவனுடைய வாழ்நாள் குறிப்பு மறைந்து போய் விடுகிறது என்று எண்ண வேண்டாம். இறைவன் உயிரினங்களுக்கு முதன்மையாக வேண்டுவன வாயவற்றை யெல்லாம் இரண்டிரண்டாகப் படைத்திருக்கிறான். அதையும் விளக்குகிறோம் காண்க.

ஒவ்வொருவர் தலையிலும் இவ்விறையெழுத்தாகிய இரேகையுண்டு. அந்த தலையெழுத்தானது இல்லமாகிய இச்சரீரம் அழிந்தபின்னர் தான் காண முடியும். அதற்கு இலேகை என்று பெயர். இல் அகம் ஆகிய சரீரம் ஏக. அது அழிய இயை இயையுற்றுக் காணலால் இலேகை என்று அதற்கு பெயர் என்றுணர்க. அதனால் உயிர் நிலையழிந்த காலத்தும்

அவனுடைய வாழ்நாள் குறிப்பை வல்ல அறிஞன் ஒருவன் உணர முடியும். இதுவரை கூறியென எல்லாம் வாக்கு என பெயர் பெறும். இதை இயம்பும் செயற்பாட்டிற்கு வாக்கியம் எனப் பெயராம்.

வாக்கு முதற்பொருள் நடத்தும் ஒலிக்குறிப்பு. அந்த வாக்கை இயம் என்னும் ஒலியால் வெளிப்படையாய் ஒலித்தறிவது வாக்கு இயமாம் வாக்கியம். அந்த வாக்கு ஒலிக்கின்ற ஸ்தானம் சரீரத்தின் வடபாகமாகிய சிரமேயாம். ஆகையாலும் எல்லா வகை ஒலிகளும் இதற்க்கு உட்பட்டதே யாகையாலும் இதற்கு வடமொழி என்றும். ஆரியம் என்றும் பெயர். (ஆர் – நிரம்பிய, இயம் – ஒலி).

வாக்கியமானது ஒலிக்கின்ற நிலயம் முதற் பொருளின் சார்புடையதாகிய இயமானனுக்கு எதிர்மாறு ஆக தொடர்பு கொண்டு இயங்கும் இயல்புடைத்தாயுள்ள விழை பொறி ஆகையால் அந்த விழை பொறியால் விழையும் செயற்பாடுகள் அனைத்தும் உண்மையை மறைத்து மயக்கத்தை தந்து அழிவுறச் செய்யும் தன்மையுடைத்தாகையால் அதை அவ்வாறே வழங்குவது சிறப்புடைத்தல்ல என்றுணர்ந்து சிறப்புடைத்தாகிய தெய்வீகத் தன்மையில் ஆக்கியவாறு காட்டுகிறோம்.

முன்பு கூறிய முதற்காரண ஒலிக்குறிப்புகள் க் – முதலாகவும், ஒ ஈருகவும் தோன்றுதலாலும் அத்தோற்றத்திற்கு முதன்மை வாய்ந்தது உயிரே ஆகையாலும் அச்செயற்பாட்டிற்குரிய நிலயில் அவ்வுயிருக்கு க்+ஒ = கோ என்னும் பெயர் வழங்கலாயிற்று. இந்தக் கோவானது தன்னிலயினின்றும் மாறுபட்டு விழை பொறியினை சாரும் போது அந்த இடம் உடம்பின் மேற்பாகமாக இருக்கிறபடியால் முன்பு கூறிய குணத்திற்கு எதிர்மாருகிய குடம் எனவாகிறது. முன்பு கூறியது போன்று ஒலிநில வரையறை இன்றி குடகுடப்பாக ஒலிக்கிறபடியாலும் குடம் என பெயர் பெறுகிறது. இவ்வாறு ஒலி தோன்றும் இடம் கழுத்து ஆகிய விசுத்தி

தானமேயாம். அவ்விசுத்தி நிலையத்தில் தோன்றுகின்ற மொழி முதற்காரண ஒலி அகரம் முதலாக அமைந்திருப்பதால் ஆதியில் கோவாய்த் தோன்றியது. பின்னர் குடமாகி ஒலிக்கும் பொழுது ஆவாயிற்று. ஆகையால் முன்பு கூறிய எழுத்துக்கள் ஐம்பத்தொன்றை இங்கு அகரம் முதலாகக் கொண்டு ககரத்துடன் புணர்வுறச் செய்து தொகைப்படுத்தி காண்பதே வரன்முறையாகும். இப்படி காண்பதற்கு வக்கரம் என்று பெயர். அ கண்டத் தானத்திற் தலைபட்டுத் தோன்றும் ஒலி. க் மொழி முதற்காரண தலைப்பாட்டு ஒலி, இதற்கு காரணமாகிய கால் என்னும் வாயு ரகரம். இவை நிலைப்பெற்று நிற்கின்ற இடம் வாசி தோன்றி ஒடுங்கும் இடம் ஆகிய மூலத்தைக் குறிப்பது ம். ஆகவே அக்கரம் என்ருயிற்று.

## அக்கர வரன்முறை விளக்கம்

முன்பு ஆருதாரச் சார்பு நிலையத்தில் வேற்றுமைபாடு எதுவுமின்றி ஆக்ஞையின் கீழ் நடஞ்செய்யும் வாசியால் தோன்றும் எழுத்துக்கள் அவ்வகத்தை விட்டு புறத்தேயுள்ள மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் விழைப்பொறியில் தலைப்பட்டுத் தோன்றும் பொழுது இருவகை வேறுபாடு உடையதாய் உணரப் பெறுகிறது. அந்த இருவகை வேறுபாடுகளே நாசியினிடத்து வலமாயும் இடமாயும் சூரியன் என்றும் சந்திரன் என்றும் ஆண் என்றும் பெண் என்றும் தெற்கென்றும் வடக்கென்றும் சொல்லப் பெறுவனவாம் என்றுணர்க.

இவ்வாருன தன்மையுடைத்தாய் இயக்கங் கொள்ளும் வாசியானது முன்பு வழுவற்ற நிலையில் இருந்து பின்னர் வழுவுற்ற நிலைமையை எய்துகிற படியால் அந்த நிலைமைக்கு வழுவுறச் செய்தலையே தன்னியற்கையாக கொண்ட பாசமென்றும், அப்பாசத்தை நிலைக்களமாகக் கொண்டு தோன்றும் உயிரணு வியக்கம் பாசத்தின் இயைந்து தோன்றலால் பாசை என்றும், அந்த பாசைக்கு முதற்காரணமாயுள்ள இயமானன் பாசம் தன்னுள் ஒடுங்கிக் கொண்டு நிற்க பசு என்று

பெயராயிற்று. இந்த பாசையை சிறப்பாகக் கொண்டது பெண்ணினமாகிய ஆரியம். பசுவின் இயமாகிய பாசியத்தை சிறப்பாகக் கொண்டது ஆணினமாகிய தமிழ். ஆகையால் வழுவுற்ற சொற் கூட்டங்களே சிறப்பாகக் கொண்டு பெருகி பொலிவு பெற்று ஆரியம் மிளிரும். அதற்கு எதிர்மாருய் எல்லாவற்றையும் தன்னகத்தே அடங்கக் கொண்டுள்ள சூக்கமாய் ஆரும் திறமுடைத்தாகி மெய்ப்பொருளே காட்டும் இயல்புடைத்தாக தமிழ் விளங்கும். இந்த ஆரியமும் தமிழும் ஒன்று இரண்டாகியபடியால் நம்மகத்தில் முதற்பொருள் உள்ளே ஒன்றும் வெளியே இரண்டுமாக சூரியனென்றும் சந்திரனென்றும் ஆக்கிய நியதிப்படி அமைத்துக் காணப் பெறுகிறது எவ்வாறெனின் சந்திரன் பதினாறு கலே பெண்ணினம் நாத வடிவம் வடமொழி, சூரியன் பன்னிரெண்டு கலே ஆணினம் விந்து வடிவம் தென்மொழி. முறையே இதன் சிறப்பியல் வழுவுற்ற தன்மையும் நிலேபெற்ற தன்மையும் ஆம். எழுத்து எண்ணிக்கையும் ஐம்பத்து ஒன்ருக இருந்தது. நாத விந்துக்களாகி உட்கார்ந்து விடுவதால் அவ்விரண்டும் நீங்க நாற்பத்தொன்பது அக்கரமாயிற்று ஆரியம். பாசம் என்னும் மன எழுச்சி பிதற்ருெலி நீங்கலாகவுள்ள முப்பத்திரண்டு எழுத்துக்களில் நாதவிந்து உட்கரக்க நீங்கிய முப்பதெழுத்தாக தென்மொழியாகிய தமிழ் தோன்றும். இதுவே ஆரியம் தமிழ் இரண்டிற்கும் உள்ள அக்கர வரன்முறை ஆம். ஈண்டு கூறியவற்றுள் நிரம்பிய ஒலியுடையதாய் ஆரியம் தோன்ற தமிழ் இருபத்தொரு அக்கரங்கள் குறைவாகக் கொண்டது போன்றும் பொது நோக்கில் காணப்பெறுமாயினும் உண்மையில் அவ்வாறு இல்லாமல் அந்த இருபத்தொரு எழுத்தையும் ஆளும் தன்மை உடைய ஆணினமாகையால் தன்னுள் ஆட்சி கொண்டு ஆளும் வகையை விளக்குகிருேம்.

உள்மனேயாகிய மூலத்தில் தோன்றும் க காரத்தில் அ காரம் தோன்றும். அகாரமானது எல்லா வகையான தலேப்பட்ட எழுத்துக்களிலும் தோன்றினுலும் நிறைபெற்ற நிறைவுற்ற

சிதைவற்ற எழுத்தாகிய க காரத்தினிடத்தில் அமைவு பெறுகின்ற- தாயுள்ளதால் அந்த அ காரமே சிறப்புடைத்தாயும் உரிமைப்பாடுடைத்தாயும் கொள்ளப் பெறுகிறது. அதனுல் தான் முதலெழுத்துக்கள் அனைத்தினும் தோன்றும் அ காரத்தை க காரமாக கூறும் வழக்கு ஏற்பட்டது. எவவ்றெனின் ங்+அ=ங, ச்+அ=ச முதலான வகையாகிய எழுத்துக்களைக் கூறுமிடத்து ஙகரமென்றும், சகரமென்றும் ஆகக் கூறுவனவால் கண்டு கொள்க.

மக்களினத்தில் ஓர் மனிதனுடைய தன்மையை அவன் சார்பு நிலையை பற்றி அறிந்து கொள்ளலால் அவனுடைய தன்மையை அறிந்து கொள்வது போல ஈண்டு கூறிய எழுத்தாகிய அகரத்தில் தன்மையை அது சாரும் இயல்புடைய சாரியைக் கொண்டு காட்டினுல் தெளிவு பெறும் ஆகையால் அந்த சாரியை விளக்கத்தையும் காட்டுகிறோம். நிறைவு பெற்று வளர்ச்சியுடைய நம் அகமாகிய மெய் இல்லையானுல் உயிரும் உயிரால் விளங்குகின்ற வாசியும் இவ்விரண்டினுலும் தோன்றி விளங்கும் ஒலியும் இல்லையாகி விடும். ஆகவே அகமும், உயிரும், உயிரால் அசையச் செய்கின்ற வாசியுமாக ககரச் சாரியை தோன்றுகிறது. க்-மெய், அ-உயிர், ஈ-வாசியாகிய கால் ம்-இவை அனைத்தும் தோன்றி ஒடுங்குகின்ற மூலம். இவ்வெழுத்துத் தொடரின் சொல் கரம் என்ருகும். ஆகையால் இதற்க்கு எழுத்துச் சாரியை என்று பெயர் வந்தது. இதைக் கொண்டு க கரத்தில் அகரம் தோன்றுகின்றது என்ற உண்மை தெளிவாகி விட்டது. மேலும் வடமொழி எழுத்தாகிய அக்கர அந்தமாம் வடிவெழுத்தில் ககரத்திற்கு மேல் நோக்கும் ஒரு கோடிட்டு அகரமாகக் காட்டியிருப்பதும் நோக்கற் பாலது. இந்த அகரம் ஒன்றே உயிரெழுத்தாகும். உயிரானது உடம்பெடுத்தற்கு ஆதாரமாயுள்ள நாத எழுத்து விந்தெழுத்து இவ்வுயிர் நாதவிந்தாலாகிய பூத எழுத்து. அப்பூதத்தாலாகிய பூதிய எழுத்து முதலியவற்றையம் முற்கூறிய முப்பது எழுத்துக்குள்

காட்டுகிறோம். உயிரெழுத்து அ கரம். நாத எழுத்து இகரம். விந்தெழுத்து உ கரம். உயிரெழுத்தாகிய அ கரம் தோன்றியுள்ளதை கூறியுள்ளோம். நாதமாகிய இகர எழுத்து ய காரத்திற்றோன்றும். எவ்வாறெனின் உயிராகிய அ கரம் தலைப்படத் தோன்றும் இகரம் ய கர யி யாகவே இருப்பதைக் கொண்டு உணரலாம். அந்த யகரத்தினுடைய ஒலி குன்றுமிடத்தில் தலைப்பட்டு வரும் இகரமாக யகர யி தோன்றும். ஆகையால் தான் அரை என்னும் எண்ணின் குறிப்பாக அகர இ போடப் பெறுகிறது.

மேலும் உயிர் நாதத்தை பற்றி தான் விந்தை சார்ந்து உடம்பெடுக்கும். அவ்வாறே அகரமானது இகாரத்தை சார்ந்து தான் விந்தெழுத்தினமாகிய தலைப்பட்டு புள்ளியினங்களை யடுக்கும். அதனால் தான் இக் இங் இச் இஞ் என்பனவாய்ச் சொல்லப் பெறுகிறது. இவ்வாறு உயிர் நாதம் விந்துவையடுத்தலால் உயிர் மெய்யெழுத்து தோன்றுகிறது. இதைக் கொண்டும் இகரம் தான் நாத எழுத்தென்பதையும் அந்த இகரம் யகரத்தினின்றும் தோன்றுகிறது என்பதையும் ய கர யி குன்றுதலில்லாத இயல்புடைய முற்றியல் யிகரம் என்றும் அந்த யிகரம் ஒலி அளவிற்கு குன்றும் போது குற்றியல் இகரமாய்த் தலைப்பட்டுத் தோன்றும் என்றும் இந்த இருவகை நாதத்தையே தற்பர நாதம் என்றும் சிற்பர நாதம் என்றும் சொல்லப் பெறுகிறதென்றும் உணர்க. ஈண்டு கூறியபடி உயிரின் இயலை நிறைவுபெற்று அகரமும் நாதத்தின் இயலை நிறைவு பெற்று யிகரமும் தோன்று மேல் உயிர் நாதத்தை சார்ந்து விந்துவை கூடி உடம்பெடுக்கும் இயற்கை போல அக்கரத்திலும் உயிர் நாதத்தை சார்ந்து விந்துவை கூடி உடம்பெடுக்கும் இயல் உண்டு எனின் அதையும் காட்டுகிறோம்.

அகரத்தின் உயிர்ச்சுழியையும் இகரமாகிய நாதத்தின் தலைப்படு சுழற்சியையும் பொருந்தியதாகத் தோன்றும் விந்தெழுத்தாகிய ய கரம் ஐ கான் எனப் பெறுகிறது. இந்த ஐ கான்

தனி உயிரெழுத்து, தனி நாத எழுத்து, இந்த உயிர் நாதத்திற்குரிய மெய்யெழுத்தாகிய விந்து எழுத்தாம் யகரம் ஆகியென கூடிய கூட்டெழுத்தாகும். திருவைந்தெழுத்திலும் நாதத்திற்கு இடமாகிய ஆகாயத்திற்கு ய கரத்தையே அமைத்து அருளியிருப்பதும் நோக்கற்பாலது. மேலும் சிதைவற்ற உயிர்மெய்யாகிய க கர நெடிலும் நிறைவுற்ற மெய்யாகிய னகர ஒற்றும் கூடிய கான் என்னும் சாரியையயானது. இது உயிர் நாத விந்து கூட்டெழுத்–தென்பதை உணர்த்துகிறது. இந்த கூட்டெழுத்தில் உயிர் நாத விந்துவை தாங்கி நிற்கும் உயிர் மெய்யாக ய கரத்தின் வடிவம் குன்ருமல் அமைத்திருப்பதும் நோக்கற்பாலது. இன்னனவாகிய காரணங்களைக் கொண்டு ய கர யி முற்றியலிகரமென்றும் அதற் தோன்றிய அகர இ குற்றியலிகரமென்றும். இந்த யிகரம் யகரத்தினின்றே தோன்றுகிறதென்பதையும் விளங்கிக் கூறியுள்ளோம். அடுத்து விந்து எழுத்தின் இயலையும் கூறுகின்ருேம். காண்க.

விந்தெழுத்து உ கரம். அந்த உ கரம் வகரத்தினின்று தோன்றும். எப்பொழுதும் உயிர் நாதத்தை சார்ந்து இருந்தால் தான் நிறைவுற்று விளங்கும். இல்லையேல் குறைவுற்று சிதையும். அவ்வாறு அ கரமாகிய உயிர் இ கரமாகிய நாதம் முதலிய எழுத்துக்கள் தலைப்பட வரும் உகரம் வகர உ வாகவே இருப்பதைக் கொண்டு நிறைவுற்ற உ கரம் வ கரத்தினின்றே தோன்றுகிறென்பது எளிதிற் புலனுகும். இதற்கு எடுத்துக்காட்டாவன அ+உரி=அவுரி, இ+உளி=இவுளி, க+உ+அஞ்சம்=கவுஞ்சம், க+உளி=கவுளி என்பன சொற்றொடர் மூலம் உணரலாம். மேலும் விந்துவானது உயிர் நாதத்தை தன்னதாக கொண்டு அதன் சார்பு பற்றி மற்றைய தனுகரணங்களை உண்டாக்குவ போன்று இந்த உ கர மானது மற்ரென்றை சார்புபடுத்திக் காட்டப் பெறும் போது வ கர உ வாக கவ்வும் அவ்வும் என்பனவாக சாரியை பெற்று வரும்.

இந்த சாரியை ஒன்றையொன்று உடன்படுத்திக் காட்டப்பெற அமைவதாய் இதனுல் சுட்டப்பெறும் எழுத்து உடன்பாட்டைக் குறிப்பனவாயிருக்கிறது. அது கருதியே ஒன்றுடன் மற்றொன்றைச் சேர்த்து கூட்டும் எண்ணிற்கு உ கர எழுத்தை போட்டு இரண்டென்று காட்டும் வழக்கு ஏற்பட்டுள்ளது என்றுணர்க. அந்த இரண்டிற்கும் ஒரு மேலைநிலைக் குறிப்பைப் போட்டு அதனை வ கர மெனக் கூறியது குன்றுதலில்லாத உ கரத்தையுடையது என்று காட்டும் குறிப்பேயாம் என்றும் உணர்க. உ கரம் முதல் இடை கடை முதலிய எவ்விடத்தின் வரினும் வ காரத்தோடு கூடவில்லையேல் குற்றிய-லுகரமாகும். வகர மெய்யோடு கூடின் மட்டுமே அது முற்றிய-லுகரமாக ஒலிக்கும். வெளியிற்றோன்றி வளியினிடத்துத் தான் அணுத்திரள் உருவாக விந்து சலனம் கொள்ளும். ஆகையால் அந்த விந்துவை அடக்கி விளங்கும் வளியின் எழுத்தாக வகரத்தை திருவைந்தெழுத்தில் அருளாளர்கள் காட்டியிருப்பதும் நோக்கற்பாலது. உ கரம் விந்தெழுத்தாக இருக்குமேல் **இவையெல்லாங் கூடி உடம்பாய வொன்றின் அவையெல்லாம் ஆனது விந்து** என்றபடி எழுத்துக்களெல்லாமும் இதில் அடங்கியிருப்பதைக் காட்டுகிறோம். காண்க.

உயிர் தலைப்படலின்றி விந்திற்கு சிறப்பின்மையால் உயிர் தலைப்படத்தோன்றும் முறையில் அகர உகரம் ஔகாரமாகும். அந்த ஔகாரம் நிறைவு பெற்ற முற்றியலுகரம். நிறைவு பெற்ற ஒன்று மீண்டும் குறுகும் இயற்கை போல ஔகாரம் குறுகும் தன்மை உடையதேயன்றி மீண்டும் நெடிலாகாது. எழுத்தினங்கள் அனைத்தினுடைய வடிவமும், கொம்பும், சுழியும், காலும், தலைப்படு புள்ளியும் கொண்ட உருவப் பகுப்புக்குள் அடங்கும் அத்தனையும் இதில் இருப்பதை கூர்ந்து நோக்கினுல் அறியலாம். ஆகவே **ஔ** என்ற எழுத்தும் முற்கூறியவாறு (ஐ என்னும் எழுத்துப் போல்) கான் சாரியை பெற்று **ஔகான்** எனப் பெறுகிறது. மேலும் விஞ்சுதலாகக் காணக்கூடிய அத்தனையும்

இதில் அடங்குவதால் விஞ்ஞை என்றும் வித்தினிடத்து எல்லாம் அடங்கிக் கிடப்பது போலும் இவ்விந்தெழுத்தில் எல்லாம் அடங்கிக் கிடப்பதால் வித்தையென்றும், குற்றியலுகரம் அல்லாமல் நிறைபெற்ற முற்றியலுகரம் இதனிடத்துள்ளமையால் ஊ அதிகம் உள்ள ஊதியம் மிகுதிப்பாடு அனைத்தையும் கொண்டமையால் சாலம் என்றும், தோன்றுதலும் குவித தன்மையின் இடைப்பட்ட எல்லாவற்றையும் கொண்டுள்ளமையால் **ஓதி** என்றும் பன்னிரெண்டாக நிறைவு பெறுகின்றபடியால் **கலை** என்றும் **உ** அறுதியாக அமைவதால் உறுதியென்றும், கூப்பிட கேட்கும் ஒலியாக அமைவதால் கேள்வியென்றும் சிறப்பாக ஔகானுக்கு பொதுவாக எழுத்தினத்திற்கும் பெயர் வந்தது. அ கர இனத்தை சேர்ந்து வருகிற உ கர குற்றியலுகரம் ஆகையாலும் முன் கூறிய முறைப்படி நிறைவு பெற்ற உ கரம் வ கரத்தினிடத்திலே தான் தோன்றும். ஆகையாலும் அது காரணம் பற்றி ஒரெழுத்தோடு ஒரெழுத்தை உடன் படுத்தப்பெறும் பொழுது வ கரம் மேற்கொண்ட உ கரமே தோன்றும். ஆகையாலும் அந்த முறைப்படி அ கரத்தோடு உ கரத்தை உடன்படுத்த அ வ் உ (ஔ) ஆயது எனவுணர்க.

இதுவரை உயிரெழுத்து, நாத எழுத்து, விந்தெழுத்து முதலிய தோன்றிய விளக்கத்தையும், கூட்டெழுத்து, வீச்செழுத்து எவ்வாறு தோன்றியன என்ற விளக்கத்தையும் கூறினேம். மேலும் இதன் விரியையும் கூறுகிறேம்.

உயிரானது உள்மனையை விட்டு பொறிவாயில் அடைந்துள்ள நிலையென்ன உள்ள தன்மையையே இதுவரை கூறப்பெற்றது. உயிர்-அகரம், நாதவிந்து-இகர உகரம். இவை பொறிவாயில் நிலைபெற்றுள்ள தன்மை தன்னிலை திரியாதிருப்பது தன்னிலை திரியும் போது நெடிலாகும். நெடில் மீளும் போது குறிலாகும். இந்த முறைப்படி குறில் நெடில் தோன்றலாயிற்று. அந்த குறில் நெடில் மாத்திரை கொள்ளும்

போது குறில் எட்டாகவும், நெடில் பன்னிரெண்டாகவும் இருக்கும். அளவிட்டுக் கூறும் போது 2:3 (இரண்டும் மூன்றுமாக) இருக்கும். முன்பு கோவாக இருந்து பசுவாகி, குடத்தின் தன்மை பெற்று இருந்த உயிரானது மூலாதார நிலையமாகிய க இலி ஆகிய தன்மையாய் காலியென்றும் வழுவுற்ற தன்மையோடு தரும் பாசத்தோடு உறவு கொண்டுள்ள நிலைமையால் நில்லாமல் காலாகிய வாசியில் லயப்பட்டு வெளியிற் செல்லும் போது கலேயம் என்றும் ஆகும். கலேய வரன்முறையை இனிமேல் கூறுவோம்.

இப்பொழுது அகர இகர உகரம் நெட்டெழுத்தாகி மாத்திரை கொண்ட விளக்கம் கூறியுள்ளோம். இன்னவாகிய காரணங்களால் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, என மூன்று ஆருயிற்று. சூக்கும சட ஆதாரத்தின் இருந்த உயிரானது தூல சடாதாரத்தில் எய்தும் நிலைமையை விவரிக்கின்றோம். காண்க.

உயிர் நாத விந்தை சாரும் நியதி தப்பி நாதம் ஆகிய இ கரம் உயிராகிய அ கரத்தை சாரும்போது எ கரம் தோன்றும். அப்படித் தோன்றுவது சரியாகப் புலனுகாது. காரணம் உயிர் நாதத்தை சேர்வது முறை. அப்படியல்லாமல் நாதம் உயிரைச் சார்வது என்பது அதற்கு எதிர்மறை. உயிரை சார்புபடுத்தினுல் தான் காண முடியுமேயன்றி, இல்லையேல் காண முடியாது. இப்பொழுது அந்த சார்பு யாதென்று காட்டாமையால் அந்த எழுத்து புலனுகவில்லை. முன்பு அகரம் இகரம் கூடிய கூட்டெழுத்து ஐ கான் என்பதை காட்டியுள்ளோம். அதன்படி முதல் எழுத்தாய் தோன்றிய நாத எழுத்து உயிரெழுத்திற்குச் சார்பு எழுத்தாக உள்ள ஐகானே சேர்த்துப்பார்க்க இ அ எ ஆ வது தோன்றும். (இ அ ஐ (ஏய்). இதை உணர்த்தும் பொருட்டே முன்பு கூறிய ஆறு எழுத்திற்கு அடுத்த எழுத்தாக இது அமைக்கப் பெற்றிருக்கிறது. மேலும் ஆறின் மேம்பட்ட ஒன்றை குறிக்கும் எண்ணின் குறிப்பாகவும் இந்த எ கரம் விளங்குகிறது. சார்பு எழுத்து இல்லையேல் இதன் உருவம் தோன்ருது என்பது கருதி

இதற்கு அடுத்தாற் போல் காஊன வைக்கப் பெற்றிருக்கிறது. இது இரண்டெழுத்து கூடிய ஒரெழுத்து என்பதைக் காட்டவே தஊலப்படு புள்ளியை மேலும் ஒன்று போட்டு காட்டப்பட்டுள்ளது. இன்னும் நாத எழுத்து வலிமை பெற்று விளங்கும் ஒரெழுத்தாக இருப்பதாலேயே ஏழிற்க்கு சத்தம் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. ஙகரத்திலும், லகரத்திலும் எகரம் சேரும் போது தன்னியல் குன்றி விடும். சகரத்தில் சேரும் போது ஆக்கம் பெறும். ரகரத்திற் சேரும் போது திரிபுறும். ரகரச் சார்பெழுத்திற் சேரும் போது துலங்கும். ஆகவே சத்தத்திற்குரிய எழுத்தாகிய எ கரத்தின் செயற்பாட்டு உறுப்பு ஐந்தையும் சக்தி பஞ்சாட்சரம் என்று கூறப் பெறுகிறது. அவையாவன ஈண்டுக் கூறப் பெற்றுள்ள ஐம், ங்க்லீம், சவ்வும், ரீயும், ஶ்ரீயும் என்பன. நாத தத்துவ எழுத்தில் ஆகாயமும், விந்து தத்துவ எழுத்தில் வாயுவும், தோன்றியுள்ளன போன்று தூல சூக்கும உருவாகிய இந்த எகரத்தில் கலா தத்துவத்தினிடமாக சிகாரம் தோன்றும். எவ்வாறெனின் நாத விந்துக்களாயிருந்த உயிர் இப்பொழுது காலில் லயப்பட்டு காலேயம் ஆகி விட்டபடியால் அவ்வாறு தோன்றுகிறது.

கால் – காற்று, அது துலங்கும் இடம் நாசி. அதில் சூரியன், சந்திரன், அக்கினி போன்று மூன்று வகையாக அந்த உயிர்வளி கால் கொண்டு நிற்கும். அக்கினியானது ஒன்றே இருசுடராகத் தோன்றி முச்சுடராகிறது. அந்த முச்சுடருக்கும் முதற் காரணமாகிய அக்னி ஒரு சார்பு பற்றி நிற்குமேயன்றி தனித்து நிற்காது. அது சார்ந்து நிற்கின்ற இடம் தனிச் சிறப்புற்று பயன்படுத்த பெறும். ஆகையால் அதுபோன்று இந்த எகரம் சகரத்தோடு கூடிச் சிறப்புப் பெறுகிறது. எப்படி நெருப்பிற்கு சார்பு நிஊல சிறப்புடையதாகின்றதோ அது போன்று எகரச் சார்புடையதாகிய சகரம் சிறப்புடையதாகி நாத எழுத்தைப் பற்றி சிகாரம் ஆகிறது. ஆகையால் திருவைந்தெழுத்தில் அக்னிக்குரிய எழுத்தாக சிகாரம் வகுத்து அருளி காட்டப் பெற்றிருக்கின்றது. நாசியில் எழும் வேதை ஒலியும் சிகாரந்தான். நாசியினடமாக

வழங்கும் காற்றின் ஒலியும் ச் எனும் ஒலி தான். அந்த ச் எனும் ஒலிக்கு ஆதாரமான உயிர் போக்குவரத்தாகிய இருதொழிற்படுவதால் இரண்டைக் குறிக்கும் ஒலியாகிய உ ச் உடன் சேர்ந்து சு எனவாகி வாசிக்குந் தன்மையை மேற்கொண்டுள்ளமையால் வாசம் எனப்பெற்று சுவாசம் என்று ஆயது. இதில் சிகாரமே முன்னிற்பது நோக்கற்பாலது. தூல சூக்கும தன்மையுடையது ஆகையால் தூலமாக எகாரமும் அதில் சூக்குமமாக ச கர எகாரமும், தூல சூக்குமத் தெளிவாக ச கர இ ஆக சிகரமும் தோன்றலாயிற்று. இதே போன்று விந்தெழுத்தாகிய உகரம் அகரத்தை சாரும் போது ஒகரம் தோன்றுகிறது. அவ்வாருகிய தோற்றம் உயிர் விந்தைச் சாராமல் விந்து உயிரைச் சார்ந்து இருப்பதால் உயிருக்கு ஒரு சார்பு பற்றிக் காட்டினுற்ருன் அவ்வொலி நன்கு புலப்படும். அவ்வகையாகிய உயிர் விந்து சார்பு எழுத்து ஔகான். உ அ என்னும் விந்து உயிரெழுத்தை ஔகானுடன் சார்பு படுத்தி பார்க்கும் போது உஅஔ ஒ ஆதல் நன்கு தோன்றும். இந்த ஒ கரமானது எல்லையற்று விரியும் இயல்புடையது. அதனுலேயே கரை கடந்து போகும் நீத்தத்தை ஓதம் என்கிருேம். கரையற்று விரியும் வாரிதியை உ காரத்தில் பிரத்தி தோற்றமாகிய உததி என்கிருேம். ஆகவே அதை ஒரு எல்லைக்கு உட்படுத்துவதே சிறப்புடைத்தாகும். கலாதத்துவம் மூன்றில் சூரியனுடைய இயலில் எ காரமும், அதில் சிகாரமும் தோன்றியதை முன்பு காட்டினேம். அதே போன்று இது நீரின் தன்மை வாய்ந்த சந்திர கலையாகும். ஆகையால் மேற்கூறிய நீர்ப்பெருக்கின் தன்மையுடையதாக ஒப்பிடப்படுகிறது. ஒ கரமாகிய ஒலி எல்லையற்று விரியும். அதற்கு எதிர்மறையாக எல்லைக்கு உட்படுத்தும் ஒலி மகரமாகும். ஒகரம் மகரத்தில் லயமாகும் என்பதைக் காட்டவே சமுத்திரத்திற்கு மகர+லயம் = மகராலயம் என்ற பெயரும் வழங்கப்படுகின்றது. மேலும் விந்துயிர் ஒருமைப்பாடுடைத்தாகிய ஒரெழுத்து இது என்பதைக் காட்டவே தலைப்படு புள்ளியில்லாமல் மேலும் ஒரு புள்ளி அமைக்கப்

பெற்றிருக்கிறது. ஒ காரத்தின் சார்பெழுத்து ஔகான் என்பதைக் காட்டவே ஒகர ஓகாரங்களுக்கு அடுத்து ஔகான் அமைக்கப்பட்டிருக்கின்றது.

வாயுவின் தூலம் நீர், நீரின் சூக்குமம் வாயு. ஆகவே விந்துத் தத்துவத்தில் தோன்றிய வாயுவிற்கு வகரம் வந்த முறையில் அப்புவின் கூறுகிய சந்திர கலா தத்துவத்தில் தோன்றும் எழுத்திற்கு வகரம் தலைப்படு மெய்யாகிய மகரம் தோன்றுவது தான் ஏற்புடைத்து என்பதையும் இது காரணம் பற்றியே தான் திருவைந்தெழுத்தில் அப்பு பூதத்திற்கு மகரம் அக்கரமாக வழங்கப் பெறுகிறது என்பது நோக்கற்பாலது. இதுவரை உயிர், முதற்பொருள் சார்பில் நின்றதும் அதனின்று நீங்கி மாறுபாடு நிலையெய்தியதும் அந்நிலை எய்திய காலத்து முதற்பொருள் சார்பில் நின்றதும் அதனின்று நீங்கி மாறுபாடு நிலையெய்தியதும் அந்நிலை எய்திய காலத்து முதற்பொருள் முப்பொருளாய் நீற்றற் போல உயிரும் நாத விந்தினைக் கூடி உயிர் நாத விந்தென முப்பொருளாய் நிற்றலும் அதில் நாத தத்துவத்தில் ஆகாயமும் விந்து தத்துவத்தில் வாயுவும் தோன்ற மேலும் உயிர் நாத விந்து, நாத உயிர், விந்து உயிர் ஆகி எதிர்மறைப்பாடு எய்திய காலத்து, சூரியனில் அக்னியும் சந்திரனில் நீரும் தோன்றியுள்ள விளக்கம் இதுவரை கூறியுள்ளோம், நீரினின்று நிலம் தோன்றி ஐம்பெரும் பூதங்களாகியவற்றை இனிமேல் காட்டுகின்றோம்.

ஈண்டு கூறி வந்ததில் ஒகரத்தில் அப்புவின் இயலும், மகரத்தில் சந்திரன் இயலும் காட்டப்பெற்றுள்ளது. ரவியின் இயலிற்குக் கூறியுள்ளதில் மாறுபட்டது போலத் தோன்றினும் இப்பொழுது கூறப்பெறுவது கலாதத்துவம். கலை ஊடும் பாவுமாக இருப்பது போலவும் இடம் வலம் மேல் கீழாக இருப்பது போலவும் ரவி மதியும் நேர் மாறுந் தன்மையாக வந்துள்ளது என்றுணர்க. அப்பு பூதத்திற்கு உயிர்க் கூறு மகாரம் என்பதையுணர்ந்தோம். மகாரம் மெல்லெழுத்துக்கள் அனைத்திற்கும் இடமாயுள்ள

நாசியின் அகத்தில் தோன்றும். நாசியின் புறத்தில் தோன்றுவனவாக உள்ளன நகாரம்.அவற்றின் இயல் மண் கூருகிய பிரிதிவின் தன்மைத்தாகும். பிரித்வின் அகத்தில் அப்பு பூதம் உள்ளது. கண்கூடாகக் காணும் காட்சியாம். ஆகவே நகாரம் மண்ணிற்கு உயிர்க்கூறு என்பது தெளிவாகிறது. இது பற்றியே தான் நகாரத்தை திருவைந்தெழுத்தில் பிரிதிவின் கூருகக் கூறப் பெறுகிறது என்று உணர்க. இவ்வகையில் நிறைவு பெறும் கால் நகாரந் தோன்றுவதைக் கண்டோம். வழக்கத்திலும் எழுத்தை நிறைவுபடுத்திக் கூறும் பொழுது நகாரத்தை இணைத்துக் கூறுவதைக் கொண்டும் ஆதார பூதமாகிய எழுத்திற்கு உயிர்க்கூறு நகாரம் என்பது தெளிவாகிறது. எடுத்துக்காட்டு அ.ன.க.ன முதலியன. இப்பொழுது உயிர் நாதம் விந்து ஆகிய முதலெழுத்தின் விளக்கமும், உயிர் நாத சார்பெழுத்தின் விளக்கமும் உயிர் விந்து சார்பெழுத்தின் விளக்கமும் **பரமாய சத்தியுள் பஞ்சமாபூதம் தரமாறித் தோன்றும் பிறப்பு** என்றபடி நாத உயிர், விந்து. உயிர் ஆகிய மாற்றுச் சேர்க்கையால் தோன்றிய எழுத்துக்களின் விளக்கமும், நாத தத்துவம், விந்து தத்துவம் கலாதத்துவம் இவற்றில் ஐம்பூதத் தோற்றம் அவற்றின் உயிர்க்கூறு ஆகியவன எல்லாம் தெளிவு பெறக் கூறினோம். அண்ட மண்டலத் தோற்றம் போன்று அமைந்துள்ள முறைப்படி இதிலும் உயிர்க்கணங்கள் தோன்றும் இயற்கைகையக் கூறுகிறோம்.

நாத விந்து கலாதிகளுக்கு முதன்மையானது உயிர். அவ்வுயிர்ச் சாரியை மூல எழுத்து **க** உயிராகிய **அ** வுடன் சேர **அக** என்றுகும். அதனுடன் நாத உயிராக **எ** கரம் தோன்றுவதைக் கூட்ட **அகள** என்றுகும். அதனுடன் விந்து உயிர் எழுத்துக்கு உயிர்க்கூறைக் கூட்ட **நம்** என்றுகும். இப்படியாகிய ஒருமைப்பாட்டில் தோன்றுவது அகளனம் அஃகேனம் என்ற தன்நிலையாகும். இத்திரி நிலையில் ஆண்,பெண், அலி என்ற மூன்று தன்மைகளும் உண்டு. இதுவே நால்வகைத் தலைப்படு

வேற்றுமையைக் கொண்டு எழுவகைத் தோற்றமுடைய எண்பத்து நான்கு பதங்களாய் விரியும் என்பதை பதவியில் கூறும் போது காட்டுகிரேும்.

**அடங்குபே ரண்டத்து அணுவண்டம் சென்று அங்கு**
**இடங் கொண்டது இல்லை இவையன்றி வேறுண்டோ**
**கடந்தொறும் நின்ற உயிர் கரைகாணில்**
**திடம்பெற நின்ருன் திருவடி தானே.**

என்ற ஆகமத்திற்கு இலக்கியமாக எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டிருக்கும் பேரண்ட முதலாக அதில் தோன்றி ஒடுங்கும் அணு அண்டம் ஈருக ஒலி இலக்கணத்தை வரையறை செய்து கூறினேம். அவ்வாறு ஏற்படுத்தியது திரிபுற்று இருக்கின்றதா அல்லது அவ்வாறே இருக்கின்றதா என்ற விளக்கமும் காட்டி ஐந்தெழுத்தில் ஆறெழுத்து தோன்றித் தமிழாகிய விளக்கமும் காட்டுகின்ரேும்.

இது இரவியின் கூருகிய ஆண் இனமாகையால் விந்து தலைப்படத் தோன்றுவது பொது இலக்கணம் தலைப்படத் தோன்றலாவது எழுத்தின் தொடக்கம் புள்ளியைக் கொண்டு தோன்றப் பெறுவதேயாம். அவ்வகையில் முதலாவதாகிய அகரம் இன்று உள்ளது போன்றே அன்று வரையறை செய்யப்பட்டது என்பதற்கு அ வினுடைய அந்தத்தின் இயைவு பெற்று விளங்கும் காரணத்தால் அ+அந்த இயை (ஏய்) ஆந்தை என்ற அவ் உருவத்தை கொண்ட பிராணிக்கு பெயர் வழங்கி வருதலைக் கொண்டு உணரலாம். உயிர்க்கு உயிராய் நின்ற முதற் பொருளுடன் ஒன்றி நின்ற உயிரணு பிரிவு பெற்று கீழ் நிலை எய்தி மனே வாயுடன் கூடி திரிவு பெற்ற செயற்பாட்டைச் சித்தரிக்கும் சித்திரமாகவே இந்த அ கர வடிவம் அமைக்கப் பெற்றிருக்கிறது. இதில் மாறுபாடு ஏதும் ஏற்பட்டால் மக்களின் பேதமை உணர்வால் தோன்றி பேதமை எழுத்தை தவிர உண்மையான அ கரம் அது ஆகாது என்றுணர்க. இதுவே அ காரத்தின் வடிவச் சிறப்பிலக்கணமாம். அகர நெடிலின் உருவ இலக்கணத்தையும்

சொல்லுகின்றோம். அ கரம் ஒலிக்கின்ற மாத்திரையினின்றும் காற்பங்களவே கூடுதலாக அகர நெடில் ஒலிக்கும். ஆகையால் அகரத்தோடு ஒரு காலைச் சேர்த்து அகர நெட்டெழுத்தின் உருவத்தை ஏற்படுத்தப் பெற்றிருக்கிறது. முதற் பொருள் தோற்றமானது பதி, பசு, பாசமென்னும், மன், மன, வாயு என்றும் மனம் வாயு கருவி என்றும் முப்பொருளாகவே உள்ளவாறு வாசியின் நிலையும் முக்காலும், அரையுமாக கணக்கிடப் பெறுகின்ற முறைப்படி குறில் அரை மாத்திரையும், நெடில் முக்கால் மாத்திரையுமாக வரையறுத்துச் சொல்லப் பெறுகிறது. அது தான் ஏற்படுத்தப்பட்ட நியதி என்பதைக் குறிக்கவே குறிலுக்கு மேல் நெடிலுக்கு ஒரு கால் கூடுதலாக அமைத்து எழுத்து வரிவடிவம் காட்டப் பெற்றிருக்கின்றது.

அ கரக் குறில், அகர நெடில் ஆகிய இரண்டிற்கும் வரிவடிவப் பொது இலக்கணமும் சிறப்பிலக்கணமும் கூறினோம். அடுத்தபடியாக இகரமாகிய நாத எழுத்தின் இலக்கணம் கூறுகின்றோம். முன்கூறியது போன்று ஆணினமாகையால் விந்துவைத் தலையிற் கொண்டு தோன்றப் பெறுகிறது. நாதமானது உயிரைத் தழுவி நிற்கும் இயற்கையுள்ளது ஆகையால் அகரமாகிய உயிரைத் தழுவி நிற்கும் ஒரு சுழற்ச்சி இதில் காணப்பெறுகிறது. இது ஆதியில் வரையறை செய்யப்பட்டவாறே தான் இருக்கின்றென்பதை இந்த இகாரத்தின் உருவத்தைக் கொண்ட உயிரினத்திற்கு ஈ என்ற பெயரே வழங்கி வருவதைக் கொண்டு உணரலாம். ஈயின் வடிவமும் அதன் சுழற்ச்சி வீச்சு வடிவமுங் கொண்டதே இகாரம். இந்த இ காரக் குறிலுடன் முன்போல் ஒரு காலைச் சேர்க்க இகர நெடிலயாகிறது. இவ்வாறே விந்தெழுத்தாகிய உகரமும் புள்ளி தலைப்படத் தோன்றுவது பொது இலக்கணம். அதில் உருவச் சிறப்பிலக்கணமாவது உயிர் நாதத்தைச் சார்ந்து விந்துவை அணுகும் போது தன்னியல் குன்றி அதனிடத்தையே சுழித்து அழுந்தி விடும். அப்படியே அழுந்தியதினின்று தலைப்பட்டுத்

தோன்றுதலே அது உருப் பெருதற்கு ஆரம்பம். அதே வடிவத்தைத் தான் உகரத்திற்கு அமைத்திருக்கிறது. உயிர் விந்துவில் அழுந்தி சுழித்த சுழியே உகரச்சுழி. அது உருக்கொள்ளத் தலைப்பட்டுத் தோன்றும் தோற்றமே அச்சுழியினின்று தோன்றும் தோன்றுவாய்க் கோடு. இவ்வாறு வரையறை செய்யப்பட்ட உருவ இலக்கணம் அன்று போல் தான் இந்த உகரத்தின் வடிவைக் கொண்ட உயிரினமாகிய நீல அட்டைப்பூச்சிக்கு உ+ரு=உரு என வழங்கி வருதலைக் கொண்டு உணரலாம். உ கர நெடிலானது முன்கூறியபடி உகரச் சுழியினிடத்து ஒரு கால் கூடுதலாகக் கொண்டதேயாகும். இதில் ஐயப்பாடு தோன்ருமல் இருக்கும் பொருட்டு உகரத்தின் மீது இவ்வெழுத்து (ள) குறிக்கப்படுகின்றது. இதே போன்று உயிர் நாத விந்துவின் மாற்றுத் தோற்றமாகிய கலை எழுத்தாம் எகரத்திற்கு உரிய உருவம் அன்று வரையறை செய்யப்பட்டது போலவே இன்றுவரை இருக்கின்றென்பதை எகரத்தை கையாகக் கொண்டு விளங்கும் இனமாகிய பிராணியாம் எகினம் என்னும் அன்னத்தைக் கொண்டு உணரலாம். இதன் நெடிலுக்கு முன்பு போன்று ஒரு கால் கூட்ட நெடிலாகும். இதேபோன்று சார்பெழுத்தாகிய ஐகானுக்கு உரிய உருவ அமைப்பின் சிறப்பியலை நோக்கும் போது அன்று அமைத்தது போன்று தான் திரிபில்லாமல் இருக்கின்றதென்பதை எண் இனத்தின் ஐந்து எனப்படும் சொற்குறிப்பின் உருவமாக இருக்கின்றபடியால் அஞ்சம் என்னும் பெயர் கொண்டு விளங்கும் அன்னப்பறவையின் வடிவத்தைக் கொண்டு உணரலாம். இது கூட்டெழுத்தாகையால் இரண்டு அன்னம் கூடி நிற்கும் வடிவத்தைப் பெற்றிருக்கிறது. அன்னம் மென்மை மிக்க பிராணி ஆகையால் வல்லின எழுத்தின் துணை அன்னக் குறிப்பையும் மென்மை, இடமை முதலிய இன எழுத்துக்களில் சிலவற்றில் தனி அன்னக் குறிப்பையும் காட்டப் பெற்றிருக்கின்றது. மென்மை, இடமை முதலிய இன எழுத்துக்களில் (மதுத்துளி போன்ற, விந்து தலைப்பட வரும் எழுத்துக்களில்) மதுத்துளியை அருந்த

அச்சமின்றி தனியன்னம் இருப்பது போன்று தனியன்னக் குறியைக் காட்டப் பெறுவது இதன் சிறப்பியல். இதை விடுத்து துணையன்னக் குறிப்பைக் காட்டுவது பேதைமையறிவால் ஆன மாறுபாடே ஆகும். மதுத்துளியை ஈக்கள் பல சேர்ந்து பருகலாம். ஆனல் அன்னம் இரண்டு கூடி பருக முடியாது என்பதாம். இந்த சார்பெழுத்தானது சூரியகலையாகிய எகரத்தை சார்பு கொண்டு விளங்கும் பின்கலை நாடி சார்பெழுத்தேயாம் என்பதனையும் உணர்க.

## ஒ கரம்

இதே போன்று ஒகரத்திற்குரிய வரி வடிவத்தை நோக்கும் போது அன்று வரையறை செய்யப் பட்டது போன்றே திரிபின்றி இருந்து வருகிறதென்பதை ஒ கரத்தின் வடிவத்தைக் கொண்ட உயிரினமாகிய பறவைக்கு ஒ கரம் என்றே பேர் வழங்கி வருவதைக் கொண்டு உணரலாம். (ஒ கரம் என்பது மயில்) கலை எழுத்தாகிய வெளிப்படைக் கலைநிலைத்தானமாகிய நாசியைப் பற்றி நிற்பதால் அந்த நாசியின் வடிவையே வடிவமாக்கிக் காட்டப்பெற்ற எகரத்திற்கும், அந்த கலை எழுத்து இனத்தில் சந்திரகலையாக விளங்கும் தன்மைக் குறிப்பால் திர ராசிக்கதிபனுகிய சந்திரனுக்கு அதன் இரட்டித்த வடிவாகிய குறிப்பைக் கொண்ட ஒகர வடிவத்தையும் முன்பு அமைத்தவாறே இப்பொழுதும் இருந்து வருகிறது என்பதற்கரிய உயிரினப் பொருள் வடிவக் குறிப்பிலக்கணத்தைக் கூறினேம். மேலும் அக்கலை சார்ந்து நிற்கும் நாடியாகிய எழுத்தே சார்பெழுத்து என்ற விளக்கத்தையும் கூறியுள்ளோம். (இதில் எகர ஒகர உருவ இலக்கண அமைதி வருமாறு).

எ கரம் சர ராசியாகிய சூரியன் ஆகையால் அச்சர ராசி தோன்றி நிற்கும் தானத்தின் உருவத்துடன், சரம் ஒற்றை ராசி ஆகையால் ஒரு கோடிட்டுக் காட்டப் பெறுகிறது. இதே போன்று ஒகரம் சந்திரகலையாகிய திரராசியாகையாலும் சூரியகலை

எழுத்தாகிய எகரத்தை எதிர்மாருக்கி திர ராசிக்குறிப்புக்காக இரண்டு கோடிட்டு காட்டப் பெறுகின்றது என்று உணர்க. இதன் உயிர்கணப் பொருள் இலக்கணம் முன்பே கூறியுள்ளோம். ஒ கர நெடிலுக்கும் முற்கூறியவாறு ஒரு கால் கூட்டி ஓ காரம் ஆக்கியுள்ளனர். இவ்வாறு வீச்செழுத்தாய் விளங்கும் ஔகான் என்னும் சந்திரகலை சார்பெழுத்தாம் இடைகலை நாடி எழுத்தின் உருவ இலக்கணம். முற்கூறியபடி சந்திரகலை எழுத்தாகிய ஒகரமும் அது நின்றிலங்கும் உயிர்நாத விந்து கலையெழுத்தின் ஒருமைப்பாடு கொண்ட உருவமும் கொண்டு விளங்குகிறது. சூரியகலை கீழும் சந்திரகலை மேலும் இயங்க அதற்கு இடையிலேயே மற்றைய அனைத்தும் நிலைபேறடைகின்ற படியால் இதற்கு இடகலை நாடி என்று பெயர் வந்தது. அவ்வாறே இவ்வெழுத்துக்களின் இடையிலேயே மற்ற எழுத்துக்கள் எல்லாம் வருமாறு அமைக்கப் பெற்றிருக்கிறது என்றுணர்க.

இவ்வாறு ஔகானுக்குரிய வரிவடிவமைதியை நோக்கும் போது இது சந்திரகலை நின்றிலங்கும் இடகலை நாடி என்பதற்குரிய விளக்கம் யாவும் கூறினேம். இந்த அமைதி யேற்படுத்தியவாறே தான் உள்ளது மாறுதலடையவில்லை என்பதற்கும் இலக்கியம் காட்டுகிறேம் காண்க. (ஔ அந்தப்பரல்) ஔவினுடைய வடிவத்தைக் கொண்ட வீச்சு என்று கூறும் ஔதும்பரற்கனி வடிவம். அத்திக்கனி வடிவம் ஔகானைப் போன்றே இருப்பதைக் கொண்டு பழைய வடிவமைதி மாறுபாடுற்றிலது என்பதை உணர முடிகிறது. இவ்வெழுத்து உயிர் நாத விந்து கலாதி வடிவம் கொண்ட நாடியின் தன்மைத்தாகையால் இவைகள் யாவும் தாது, மூலம், சீவன் என்ற உருவமைதிக்கு உட்பட்டதாகையால் தாது மூலம் ஔதும்பரல் ஆகிய தாதுவும் வீச்சுவும் கொண்ட அத்திப்பழம் அதற்குரிய சீவன் கனியையே உணவாய்க் கொண்டு சீவிக்கும் உயிரினமாகிய கனிதின்னி வௌவால் கனியையே வௌவும் தன்மையை நெடிதேயுடமையால் வௌவால் என்னும் பெயருள்ள பிராணியின் வட்டமிட்டுச்

சுழன்று திரியும் சுழற்சியும், அது நிலைபெற்று நிற்கும் காலும், ஒன்று கூடிய ஒருருவமே தாது மூலமாகிய ஒ கரத்தையடுத்து வரும் ஔகானின் சீவன் என்றுணர்க.

## அஃகேனம்

இதுவரை உயிர், நாதம், விந்து, கலை, கலையின் சார்பு நாடி ஆயவற்றைக் கூறினோம். இவையனைத்தும் ஒன்று கூடி நிற்கும் ஒருருவமாகிய ஆகத்தின் எழுத்து வடிவமைதியையும் கூறுகிறோம்.

அ என்னும் உயிரானது அஃதல் கொண்டு நிற்பதாலேயே ஆகம் எனச் சொல்லப் பெறுகிறது. அந்த ஆகமானது ஆண் பெண் அலி என்ற மூன்று வகைக்குள் அடங்கும். ஆண் வலம், பெண் இடம், அலி நடு, இந்த மூவகைத் தோற்றமும் விந்துவினின்று தோன்றியதேயாம். ஆகையால் வலம் இடம் நடு ஆகிய மூன்று விந்துக்களாக இவ்வெழுத்துத்தின் வடிவம் அமைக்கப் பெற்றிருக்கின்றது. இது சிறப்பியல். இதனை பொது நோக்கமாக பார்க்கும் போது சூரியன் சந்திரன் அக்னி ஆயமுச்சுடரின் வடிவ –மென்றும் முச்சுடரும் ஒன்றுபடுகின்ற குண்டலி வடிவம் என்றும் பேசப் பெறுகின்றது. குண்டலியைச் சார்ந்து நிற்கின்ற நாடி சுழி முனை ஆகையால் சுழியும் முனையும் கொண்ட வடிவத்தை இதனொடுஞ் சேர்த்து எழுதப் பெறுகிறது. இவ்வெழுத்தின் வடிவமைதி முதலியன ஆக்கியவாறே தான் இருந்து வருகிறது. திரிபுற்றிலது என்பதற்கு இதன் வடிவத்தைக் கொண்ட தாது மூலப்பொருளாகிய மணிக்கு உரு+திரள்+அக்கம்+மணி = உருத்திராக்கமணி என்ற பெயர் வழங்கி வருதலைக் கொண்டு இதை சார்ந்த சீவன் ஆம் உயிரினத்திற்கு ஏனம் என்ற பெயர் விளங்கி வருகிறது. இந்த அக்க ஏனத்தைக் கொண்டு எழுத்தினத்தின் நிறைவான வடிவ இலக்கணத்தை உணரலாம். அவை வருமாறு. வரிவடிவத்தைக் காட்ட கோடும், அக்கோட்டினிடத்து ஒழுங்கு தவறாமல் எழுத்துப்

பொறித்தல் செய்ய வேண்டுமென்பதைக் காட்ட பொறியும் இவெழுத்தால் ஆம் தொகுதித் தொடர்பை இணைக்க மேற்கொள்ளும் பொருள் தொடரைக் காட்டத்துளையும், இவை ஒழுங்குற இணைத்தல் செய்யப்பெறுவது நூல் என்பதைக் காட்ட நூலும் அமைந்துள்ளதை கொண்டு எழுத்திலக்கணத்தை உணர முடிகிறது. மேலும் உயிர் நாத விந்து கலைச்சார்பு உருத்திரள் இவ்வுருவமாக இருப்பதையும், இது வித்தாக இருப்பதால், உயிர்துளை இருப்பதால், நாதம் பொறி இருப்பதால், விந்து மேலும் கீழும் முன்னும் பின்னும் ஓடும் கோடு இருப்பதால் கலை இவற்றின் சார்பு காண்ட திரட்சி உரு+திரள்+அக்கம்+மணி ஆயினவாறு உணர்க.

அகத்தியத்தில் எழுத்துத் தோற்றத்தையும், அவ்வெழுத்தின் வரிவடிவ இலக்கணத்தையும் கூறியவாறு எழுத்தின் ஒலி வடிவ இலக்கணத்தையும் கூறுகின்றோம். காண்க.

**அகரத்தின் ஒலி வடிவ இலக்கணம் :**

அகரத்தின் ஒலிவடிவைக் கொண்ட பிராணி பசு. அதனாலேயே அதற்கு ஆவென்ற பெயர் வழங்குகிறது. அதன் ஒலியைக் கொண்டு அகரத்தின் ஓசைத் திறத்தை உணரலாம். அதே போன்று இகரத்திற்குரிய ஒலி உருவங் கொண்ட பிராணி ஈ. அதன் ஒலியைக் கொண்டு இகரத்தின் நாதத்தை உணரலாம். (இதன் சிறப்பியல் ஒலியாலும் உருவத்தாலும் ஒன்றேயாம்) அவ்வாறே உ கரத்தின் ஒலி உருவ உயிரினம் நரி. அதனாலேயே உ+உளன்=ஊளன் என்ற பெயர் வழங்குகிறது. இதன் ஒலியைக் கொண்டு உ கரத்தின் நாதத்தை உணரலாம். இவ்வாறே எகரத்தின் ஒலி உருவ உயிரினம் இடபம். இதன் ஒலி எ என இருப்பதாலேயே எ+உறு=ஏறு என்ற பெயர் அதற்கு வழங்குகிறது. அவ்வாறே ஐகானுக்குரிய ஒலி உருவ உயிரினம் சின் வீடு (சில் வண்டு). நாதமானது வல்லிசை பெற்றுத் தோன்றும் போது கடினமான இயற்பொருள் சில்விட்டு வெளியுண்டாகும்.

அப்படிச் சில் விடச் செய்யும் வல்லொலியாகிய ஜகான் இதனிடம் ஒலித்தலாலேயே சில்லெ என்ற பெயர் இதற்கு வழங்குகிறது. இவ்வாறே ஒ காரத்திற்குரிய ஒலி உருவ உயிரினம் ஓநாய். ஓ என்ற ஒலி இதனிடம் தோன்றும் இயற்கையாலேயே ஓநாய் என்று பெயர் வந்தது. இவ்வாறே ஔகானின் ஒலி உருவ உயிரினம் யானெ. யானெயின் பிளிறலோசை ஔகானெக் காட்டுவதாகவுள்ளமையாலேயே இதற்கு உவா (ஔ) என்ற பெயர் வழங்குகிறது. இவ்வாறே அஃஏனத்தின் ஒலி உருவ உயிரினம் பாம்பு. ஒலிக்கு முதற்காரணமான வெளியும், காற்றும் ஒலித்தற் பொருட்டுச் செயற்படும்போது பிறக்கும் அஃக என்கிற ஒலி இதனிடம் தோன்றுவதனுலேயே இதற்கு அஃகி என்கின்ற பெயர் வந்தது. அகத்திய எழுத்திலக்கணம், அவ்வெழுத்தின் வரிவடிவ இலக்கணம், அவ்வெழுத்தின் ஒலி வடிவ இலக்கணம் மூன்றும் கூறினேம். கலெ சூரியன், சந்திரன், அக்னி என்கின்ற மூன்றுகவே அமைவு பெற்றிருப்பதால் அவ்வாறே இக்கலாந்தமும் மூன்றுய் அமைவு பெற்றதென்று அறிக.

ஈண்டு கூறிவற்றுள் திருவைந்தெழுத்தின் ஆதிகத்துக்குட்பட்டு உயிர், நாதம், விந்து, கலெ, கலாதி தோன்ற அதுவே பூத பூதியமாக விளங்கியவற்றைக் காட்டினேம். அவையாவென திருவைந்தெழுத்து நமசிவய. உயிர் அ, நாதம் இ, விந்து உ, எ,ஒ–கலெ; ஐ, ஔ கலாதி. ஆ,ஈ,ஊ, ஏஓ இவற்றுடன் ஐ,ஔ என்னும் கலாதி எழுத்துச் சேர்ந்து பூதிய எழுத்து ஆகும். முற்கூறிய திருவைந்தெழுத்து தனித்து நிற்கும் போது, உயிர், நாத, விந்து, கலெ ஆகிய ஐந்தும் பூத எழுத்து என்றும், இவற்றின் நெட்டெழுத்தும் கலாதியும் சேரப் பூதிய எழுத்து என்றும் சொல்லப் பெறும். உயிரினம் உருப்பெற்றுத் தோன்றுகின்ற காலத்தில் உயிர் நாத விந்து கலெ கலாதி எனப் பெயர் பெறும். அப்பொழுது முதற்பொருள் அதனுடன் சார்பு கொண்டு நிற்கும். உருப்பெற்று விளங்கும் காலத்து முதற் பொருள் தனிக்க யாக்கையானது பூத பௌதீகமாக விளங்கும். அந்த இயற்கைபடியே

திருவைந்தெழுத்து தலைப்பட தோன்றும் போது உயிர் நாத விந்து கலை கலாதி என எழுத்துத் தோற்றத்திற் கூறியவற்றையே எழுத்துருப் பெற்று தோன்றிய பின்னரேப் பூத எழுத்தென்றும் பூதிய எழுத்தென்றும் கூறப்பெறுகிறதென்று உணர்க.

## பூத, பூதிய அடுக்கு நிலை

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ இவ்வாறே மூலம் முதல் அனுகதம் ஈருக தோன்றும் எழுத்துக்களை அடுக்கிக் கண்டு கொள்க. இந்த அடுக்கு நிலை முறைமைக்கு மாறுபாடின்றியே தான் இப்பொழுதுள்ள தமழ் நெடுங்கணக்கு வழங்கப் பெறுகிறது. ஆதியில் கோவாகத் தோன்றியது பின்னர் ஆவாகி, பசுவாகி, குடமாகி காலேயமாகி இப்பொழுது நிரையாய் (பசு) அமைந்தவற்றைக் காட்டினேம். இந்த நிரையே வரி வரியாக இசைவு கொண்டு வருதலால் வரியென்றும், எழுத்தினுடைய எண்ணிக்கை கணக்குக்கு உட்படுத்தபடுதலால் கணக் என்றும், அந்த கணக்கானது ஆறு ஆதார ஏழு அத்துக்களுக்குரிய அடுக்கு நிலையினின்றும் நீட்சி பெறுவதால் நெடுங்கணக்கென்றும் பெயராயின. இவ்வாருகிய நெடுங்கணக்கு நெட்டிலேயே சென்று விடாமல் ஞானசிரியன் உபதேசிக்கும் ஞானனுபூதியியலின்படி ஆக்கிப் பெற்றுள்ளதையும் காட்டுகின்ரேம். பூத பூதியத்தை முன்பு கூறினேம். அவற்ருலாய கருவி கரணுதிகள் இன்னின்ன என்பதையும் கூறுகின்ரும். பூதங்கள் ஐந்தும் நிலைபெற்று நிற்கும் தானத்திற்கு ஆதாரங்கள் என்று பெயர். அவ்வகை ஆதாரங்கள் ஆறு உள்ளன. அவ்வாருதாரத்திலும் விசுத்தியிற் தோன்றிப் பன்னிரெண்டாம் நடை கொள்ளும் கா இலியாகிய காலியைக் கால் கொள்ளும் படியாக நடைபெறச் செய்யும் பொழுது அது மூலத்திலடங்கி மூலத்திற்குரிய க வில் அடங்கி க கராதியாகவே நடைபெறும்.

**உந்திச்சுழியின் உடனேர் பிராணனை**
**சிந்தித் தெழுப்பி சிவமத் திரத்திஞல்**
**முந்தி முகட்டில் நிறுத்தி அபானனை**
**சிந்தித் தெழுப்ப சிவனவன் ஆம்.**

என்றபடி தமிழே சிவமாய் அமைவதைக் காட்டுகின்ருேம். உபதசம் என்னும் பன்னிரண்டாய் கண்டத்தானமாகிய விசுத்தி நிலயத்தில் தோன்றி நின்ற கலையை உந்திச்சுழியாகிய மூலத்திற் சேரும்படி செய்ய துவாதசம் என்னும் பன்னிரெண்டு ஆகி நின்ற அது துவாதச அந்தமாய் மூலத்திற்குரிய எழுத்தாகிய ககாராதியாகவே அமைந்து விடும். அவ்வாறு அமைந்தனின்று மேல் நோக்கமாய்ச் செல்ல அவ்வெழுத்துக்கள் கசடதப என்றவாறு அமையும். இவ்வல்லினத்தைச் சார்ந்த மெல்லினமாக ங ஞண நம அமையும். இவ்விருவகையெழுத்தின் இடையிற்ருேன்றும் இடையினமாக யரலவழ அமையும். அவ்வாறு அமைவதற்கும் காரணம் கூறுகின்ருேம். தூலம் சூக்குமத்தைப் பற்றி நிற்பது போல தூல சடாதாரம் சூக்கும சடாதாரத்தைப் பற்றி நிற்கும். அந்த முறைப்படி தூலமாகிய வல்லினம் சூக்குமமாகிய மெல்லினத்தைப் பற்றி நிற்கிறது. மாறுபாடு அற்ற தென் திசைக்குரிய நான்கு நிலயத்திலும் அதன் மேலுள்ள மூன்று நிலயத் தானத்திற்குரிய கலைகள் வந்து ஒன்றி விடுவதால் இந்த நால்வகை நிலயமே ஆருகக் கணக்கிடப் பெறும். அவ்வாறு கணக்கிடப்பெறும் பொழுது கசடதப ற வுடன் கூடி ஆருகும். அதற்கு மேலும் ஒரு விளக்கம் கூறுகிருேம். முன்கூறிய அகர முதலனவாய எழுத்துக்கள் உயிரும், உயிரினமும் ஆயிற்று. அந்த உயிரினம் முதற்பொருள் சார்பினின்று பிரிய எழுத்துக்கள் உயிரும், உயிரினமும் ஆயிற்று. அந்த உயிரினம் முதற்பொருள் சார்பினின்று பிரிய பூத பூதியமாயிற்று என்பதைக் காட்டினேம். பூதம் பூதியம் ஆம் பொழுது அதைச் சார்ந்து புலன் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, பொறி ஐந்து,

கரணம் நான்கு ஆகிய இருப்பதி நான்கும் ஆன்ம தத்துவமாய் தோன்றுமாறு போல க கராதி ஙகரத்துடன் ஐந்தாகவும், அதே போன்று ச கரம் நான்கும் ஞ கரத்துடன் ஐந்தாகவும், த காரம் நான்கும் நகரத்துடன் ஐந்தாகவும், ப காரம் நான்கும் ட காரம் நான்கும் ன கரத்துடன் ஐந்தாகவும் கூடி ஆன்ம தத்துவ எழுத்தாயிற்று என்று உணர்க. இவ்வாறு ஆன்மா என்னும் பசு தத்துவம் பெற்றதால் மோழையாக இல்லாமல் கொம்பு, கால் முதலியன பெற்ற வலிய சிறப்புடைதாகிறது. ஈண்டு கூறிய தத்துவ நியதிப்படி கசடதப என்னும் எழுத்துக்களை வரிசைபடுத்தி 5 பூதங்களின் ஆதார நிலையமாகக் கொள்ளப் பெறுகிறது என்று அறிக. இவ்வைம்பூத ஆதார நிலையங்களில் சீவன் சிவமாவது போல பசு பதியை அடைகின்ற வாறையும் காட்டுகின்றோம்.

சீவன் சிவமாவதற்கு ஆக்கப்படும் செயற்பாட்டில் உந்திச் சுழியின் உடனேற் பிராணனைச் சேர்த்தது உயிர்க் கலை பன்னிரெண்டை மூலத்தில் சேர்த்து அவ்வண்ணமே நிரை நிரையாக காணப் பெற்றது. அம்மூலா கமலத்தை மேன்முகமாக மலர்ச்சியுறும்படி செய்வது உந்திச் சுழியின் உடனேர் பிராணனைச் சிந்தித்து எழுப்புதலாம். அவ்வாறு எழுப்புதலால் ஆன்மா மோழையாய்த் தத்தி திரிதல் கெட்டுத் தத்துவமாகும் வலியைப் பெற்றுள்ள ஆன்ம தத்துவ நியதி தான் மேல் கூறப் பெற்றது. அந்நியதியின் காரணமாக அது இறைவனோடுடன் ஒன்றுதலை சிவமந்திரத்தினால் முந்தச் செய்யலாம். அதுவே நாசித் துளையினிடத்து ச்+இ=சிகாரமாகத் திரிந்த ஆன்மா அல்லது உயிர்வளி முழு நலம் பெறும் பொழுது வ கார ய கார, நகரா மகாரம் ஆகிய ஐந்தால் குன்றுத நலம் பெறுதல். அது காவன்னா என்ற எழுத்தில் வகரமும் இயன்னா என்றனவாய எழுத்துக்களில் யகரமும் இவற்றின் ஆதார எல்லையாய் நகாரமும், தனித்து அமைவுறுத்தும் எல்லையில் மகாரமும் தோன்றும் நியதியைக் கொண்டு உணரலாம். மேற்கூறிய தூல சூக்கும ஆதார நிலையங்களின் இடை நடை கொள்ளும் வாசியானது

வெளியினின்று தோன்றும் இயல்புடைத்து ஆதலால் அவ்வெழுத்திற்குரிய யகாரத்தையும், அவ்வெளியில் சலனம் செய்கின்ற வளியின் எழுத்தாக ரகரத்தையும் அவ்வெழுத்தின் திரியாக லகரத்தையும் திரியற்ற உயர்நிலை வளியாக வகரத்தையும் அவ்வுயிர் நிலைவளியாய் அமிததாரணை செயற்பட்டு இயற்கை திறமாய் ழகாரத்தையும் அவற்றின் வெளிப்பாட்டு அமைக்கப் பெற்று ஆருதார நிலையங்களின் இடையில் திரியும் இனமாகிய இடையினமென்று ஆதார முற்பாட்டு வளியின் அமிர்த எழுத்தாக யரல வழள அமைக்கப் பெற்றிருக்கின்றதென்று அறிக. இதில் பன்னிரெண்டாய் நின்றதை வாசி என்று முன்கூறி, ஈண்டு யரலவழள வாசியெழுத்தென்று கூறுவது இரட்டித்துக் கூறல், என்னும் முரண்பாடு உடையதாக ஆவன போன்று தோன்றினுலும் ஆழ்ந்து நோக்கும் போது யகர வகரந்தான் அந்த பன்னிரெண்டாயிற்று. பன்னிரெண்டாகி புறப்புறம், புறம், அகப்புறம், அகம் ஆய நிலயத்து அடங்கி மேனேக்குற்ற காலை காணும் இயல்புடைத்து ஒன்றும் புறப்புறத் தோன்றும் இயல்புடைத்து ஒன்றும் ஆக இரண்டு பகுப்பு ஆகலுற்றது என்பது தோன்றும். இடையினம் என்பது யாது என்பதையும் அவ்வின எழுத்து வரல் (ன்) முறை யாதென்பதையும் விளக்கிக் காட்டினேம். உயிர் நிலை வளியில் ஐம்பூதத் தோற்றம் உள்ளன போன்று இவ்வெழுத்துக்களும் பூத பூதிய தோற்றத்தை பெற்று நிரல்நிரையாயிற்றென்று உணர்க. மேலும் ரகரம் கால் என்னும் காற்றிற்குரிய அக்கரம் என்பதைக் காட்டவே குறுகுதலின் நீள் நடை கொள்ளும் எழுத்திற்கு இதை முன்னிலை படுத்தியிருக்கிருர்கள். அந்தக் கால் சாகாத காலாக ஆக்கும் முறையில் உயிர், நாத விந்தை இணைத்துத் தமிழ் வழங்கப் பெறுகிறது. இதைக் கொண்டு உயிர் நிலை வளி அம் முதல முக்குறில் சேர்ந்த ரகரம் என்பதும் அல்லாத வனஅஃது அல்லாத ரகரம் என்பதும் விளங்கக் கிடைக்கிறது. இந்த உயிர்வளியின் இயல் சிறப்பைச் சொல்லும் முன்பு முன்கூறிய தொடர்பின்

விளக்கத்தைக் கூறுகின்றோம். மூலம் முதல் நான்கு நிலையங்களிலும் துலங்கும் சிவ மணங்கமழ் மலர்ச்சியைக் கண்டதன் பின் விசுத்தித் தானமாகிய முகடேறிச் செல்லும் பொழுது கண்ட தானத்தில் எ,ஒ என்ற இரண்டாக உள்ள ஒலி, பன்னிரெண்டையும் அடக்கி நிற்கும். அதையுங் கடந்து மேற்செல்லும் பொழுது புருவ நடுத்தானத்தில் ழ,ற தோன்றும். அதில் தூல சூக்கும சடாதார உயிர் நிலை வளி அடங்கி நிற்கும். அதையுங் கடந்து செல்லும் முகட்டெல்லையில் னகாரந் தோன்றி நிற்கும். இந்த ஐந்தெழுத்தில் முற்கூறிய எழுத்துக்களெல்லாம் அடங்கி சிவரூபமாகும். அதற்கு விளக்கம் வருமாறு.

எகரம் ஒகரம் என்னும் இரண்டில் மற்றைய உயிர்க்கலை எழுத்துக்கள் அடங்கி நிற்கும் என்பதை முன்பே கூறியுள்ளோம். ஆயினும் கண்டத்தானத்தின் இயற்கை ஒலி எகர ஒகரந்தான் என்பதை அந்நிலையம் தன் வயமிழந்து ஒலிக்கச் செய்யும் வேதைப் பாட்டொலியால் அறியலாம். ஆகவே ஒடுங்கு நிலையத்து இவ்விரண்டும் தோன்றுகிறது. மூல அக்கினியால் பசு அதன் மலமாகிய படர்ச்சி ஆறும் நெருப்பாக நீறுபடத் தோன்றும். நெருப்பாறு ஆகிய ஒடுக்கமே முற்கூறியது என்று அறிக. அடுத்து எழும்பி மேற்சென்று புருவ நடுத்தானத்தை அணுகும் போது முற்கூறிய நெருப்பாறில் வேகாத தலையாக றகரந் தோன்றும். எவ்வாறெனின் ரகரம் கால் என்பதற்கும், அது உயிர்பெற்று சாகாத கால் ஆயனிமைக்கும் முன்பு விளக்கம் காட்டினோம். அந்த சாகாத கால், மூலாக்கினியில் சாரும் பொழுது வலிமை பெற்று **றகரம்** ஆகும். அந்த ரகரம் மதுரம் பெறும் செயற்பாட்டை பொருந்திய ஒலியாக புருவ நடுத்தானத்தில் ஒலிக்கப் பெறும் பொழுது வேகாத தலை எனப் பெறுகிறது. காரணம் அக்னி மண்டலமாகிய மூலத்தினின்றும் எழும்பி, சூரிய மண்டலத்தை கடந்து சந்திர மண்டலத்தில் நிலை பெறுவதாலும் தலைப்பட்டு வரும் எழுத்துக்களுக்கும் ஆதாரமாய் நிற்பதாலும் வேகாத தலை என்று சொல்லப் பெறுகின்றது என்றுணர்க. மேலும் நெருப்பானது

சந்திர சாந்த வளியை வேக வைக்க முடியாமையும் ஒரு காரணம். தலையில் தலைப்பட்டு நிற்கும் உறுப்பின் அயர்ச்சி இயல் ஒலி றகர மேயாகும். இவ்வெழுத்து ஆக்கம் பெற்ற வளியெழுத்தே என்பதை ரகரந் திரிந்த லகரம் பொருந்தி வரும் வல்லெழுத்துக்களின் இடையில் இந்த றகரந் தோன்ற பெறுவதால் உணரலாம். மேலும் பழகு தமிழ்ச் சொல்லில் இந்த றகரம் வல்லெழுத்துக்களில் முதன்மைத்தாகிய க கர மெய்யே ஆகி விடும். அது வாசிதாரணை நிறைவு பெற்று தியான லயம் கடந்து ஆதிக்குச் சமமாய் ஒன்றும் சமாதிக் குறிப்பைக் காட்டுகிறது. மேலும் உயிர்வளிக் கலை சர சாதனத்தால் முதற் பொருளாகும் பொழுது முன்பே ஒரு முதல் தோன்றி நிற்பது போலவும் ஆம் என்றுணர்க. இதுவே கற்கரி என்பது கக்கரி என்னும் பழகுத் தமிழ்ச் சொல்லாம். இது றகரத்தின் சிறப்பியலாம். உயிர் நிலை வளியானது மேற்கூறியவாறு வேகாத தலையாகும் போது அது தோன்றி நிற்கும் இடம் புருவ நடுத்தானம் என்று சொன்னோம். அந்தத் தானத்தில் சாகாத காலாகிய வளியே வேகாத தலையாயது என்னும் பொழுது அதையாதாரமாய்க் கொண்டு மிளிரும் சீவன் எவ்வாறுயது என்பதையும் கூறுகிறோம். சீவன் வாசியையணுகியே நிற்குமியல் புடைத்தாதலால் இதேயிடத்தில் தான் சீவனும் நிற்க வேண்டும். ஆனால் உந்திச் சுழியின் உடனேர் பிராணனைச் சிந்தித்து எழுப்பிச் சிவ மந்திரத்தினால் முந்தி முகட்டி நிறுத்தி அபானனைச் சிந்தித்தெழுப்பும் செயற்பாடு நிகழ்ந்துள்ளமையான காரணத்தால் இவ்விடத்தில் சீவன் சிவனைக் காண வேண்டும். அவ்வாறு சீவன் சிவனைக் கண்ட எழுத்து தான் ழ காரம். அதன் விளக்கம் வருமாறு.

சீவனாகிய உயிரெழுத்து அ காரம். அதன் விளக்கம் முன்பு கூறியுள்ளோம். அதுவே பேசும் எழுத்து என்று சொல்லப் பெறும் காரணம் பேசுதற்கு முதற்காரணமாகிய செயற் பாட்டளவிற்றலைப் படத் தோன்றுவதைக் கொண்டு உணரலாம். அது பேசாத

மேலான ஞானம் உறும் செயற்பாடுடையதாய்ச் சிவ தத்துவம் பெறும் பொழுது ழகாரம் ஆகிறதென்பதை பேசுதற்குரிய செயற்றலைப்படும் உறுப்பாகிய நாவு செயலிழந்த வேதையுறுங் காலத்தில் புனலும் உட்புக முடியா நிலைமையில் தோன்றுங் காரணத்தால் காண்க. ஞானிகள் மோனமுற்று ஐம்புலக் கதவை தாலால் அடைத்து அமிதமாய் போகாத புனலாய் வரும் அமிழ்தை நுகரும் பொழுது தோன்றக் கூடிய செயற்பாட்டொலியைப் போலியாகக் காட்டும் இயலே முற்கூறியதாம் என்றுணர்க. அதுவே பெருவழக்காய் காணக் கூடியதாகையால் அதைக் காட்டினோம். அதன் உரிமைச் சிறப்பையும் விடாது அடுத்துக் காட்டினோம். இதுவே கண்டதைக் கொண்டு காணுததை காட்டும் முறைமையாம்.

ம – இது பேசாத எழுத்து

அ – இது பேசும் எழுத்து

ம என்னும் எழுத்து தலைப்பட வரும் பேசாத பகுதி அகரம்

ற இதுவே ழ என்னும் உருவம்.

மகரமாகிய பேசாத எழுத்துடன் பேசும் எழுத்தாகிய அகரம் பேசாத எழுத்தாய் பேசத் தொடங்கும் மேல்நிலை கெட்ட ஓருருவச் சேர்க்கையாகவே ழகாரம் அமைந்து அதன் உருவத்தின் இயற்கையாலும் நமக்கு உண்மையை உணர்த்துகிறது. சிவம் சத்தியைச் சாரும் போது குன்றுத ஆக்கம் விளைவன போன்று ழகரம் றகரத்துடன் சார்புற்று வரும் கால் மாறுத புதுமை பூத்த இயற்பாடே நிலைபெற்றுக் காணும். றகரம் சக்தியின் எழுத்தாக உள்ளமையை காட்டவே ரகரத் திரமாகிய இரட்டை வடிவம் கொடுக்கப் பெற்றிருக்கிறது. இவ்விரண்டும் பிராணனும் வாயுவுமே. அநுபூதி சாதன செயற்பாட்டால் சிவ தத்துவம் சத்தி தத்துவத்தைப் பெற்று விளங்குகிறது. அதுவே றகார ழகாறது எனின் சீவனோடு சார்ந்த மனோ நிலை அநுபூதிச் சாதன செயலால் என்னவாகிறது என்பதையும் காட்டுவோம். இதுவரை உயிரும்

வளியும் சலனம் செய்யும் இடத்தின் செயற்பாட்டைக் கூறினேம். இதையும் கடந்து மேல் நிலை எய்தும் போது வாசியின் சலனம் அடங்கும் நிலைபேறு கிட்டும். அதனுல் ஒடுங்கும் தன்மைப்பேறுடைய னகரம் தோன்றும். மனமானது செயலற்று பொருளற்று ஒடுங்கும் இடமே ஞானம் உதிக்கும் இடமாகையால் அத்தன்மையைத் தரும் எழுத்தாகிய னகரம் ஈண்டு தோன்றப் பெறுகிறது. எல்லா எழுத்துக்களையும் ஒலி வரையறைக்குட்படுத்திப் பொருளற்று ஒடுங்கி இறுதியெய்தி நிற்கும் செயற்பாடே அ.ஞ. ஆவன்ஞ, இ.ஞ, ஈயன்ஞ என்று வருவனவாம். வல்லிசையாகிய தாரத்திற்கு ஆக்கம் தந்து அந்த சந்தமாய் எல்லாச் சொற்களையும் தம்மகப்படுத்தி நிற்கும் செயற்பாடே மனமொடுங்கி ஞானம் தோன்றியமையைக் குறிப்பனவாம். உரோமமாகிய மயிரின் பால அம் என்னும் தண்ணீர் அடங்கி நிற்ப போன்று எல்லா எழுத்துக்களும் சொற்களும் தன்னுளடங்கும் வண்ணம் ஞானம், மோனம், பூரணம் என்னும் மூவகைத் தன்மையாயினே, மனம் போன்று மூவகைத் தன்மை பேறுடைய ணநன என்னும் மூன்ருய் இது நிற்பதைக் குறிக்கவே மயிர்பாலம் என்று இதற்கு பெயர் வழங்கப் பெறுகிறது. இவ்வாறு தகரத்துடன் னகரம் சேரும் சிறப்பியல் பெற்ற சீவன் ஆதன் எனப் பெயர் பெறும். இந்த ன ஆ வை தன் அது என்று கொண்டு நாதனுய் முதற்பொருள் நிற்க, ஆதன் நாதனை நோக்கித் தன்வயமிழந்து அவனே தானுய் அடங்குவ போன்று அகரம் முதல் னகரம் ஈருகவுள்ள ஒலிக்கூட்டக் காரணப் பொருட் குழாம் எல்லாம் அடங்கி சிவரூபமாகச் சம்பந்தமுற்ற சைவமாகிய சிவரூபமாய் நம் தமிழ் நிற்கும். அப்படி நிற்குங்கால் சைவ தத்துவம் ௩௰௬ (36) ஆக ஈண்டு கூறியனவாய் எழுத்துக்கள் நிற்பதையும் காட்டுகிரேம். ஆன்ம தத்துவம் ௨௰௪ எவைகள் என்னும் விளக்கம் முன்பே கூறியுள்ளோம். இவ்வெழுத்துக்கள் சொல்லாக வருங்கால் முதல், இடை, ஈறு என்பனவாகிய மூவகையிடங்களை யுரித்தாய்க் கொண்டு கால தத்துவம் பெற்று நிற்கும். அப்படி நிற்பது இன்ன எழுத்தின்

முன்னர் இன்ன எழுத்து தான் நிற்கும் என்ற நியதி உடைத்தாய் நியதி தத்துவம் உடைத்தாகும். இவ்வாறு காலம் நியதிக்குட்பட்டு வரும் சொற்கள் தென்கலே வடகலே என்ற கால தத்துவத்தை – யுடைத்தாகும். இந்த கலேச் சொற்கள் வித்தில் மரம் அடங்கினுற் போன்றுள்ள இயைவைப் பெற்றுள்ள வித்தியை தத்துவமுடைய உரிச் சொல்லாகும். இவ்வாருகிய இசைத்தமிழ் இசைப்பதற்கு மெய் என வளம் பெற்றுள்ள மேளகர்த்தா என்னும் இராகமாக அமையும். அப்பொழுது அது ஒரு ஆண் மகனுடைய செயற்பாடமையப் பெற்றுள்ள உருவத் தோற்றத்தை பெருவதால் புருட தத்துவத்தையுடைத்தாகும் இவைகளெல்லாம் ஒலியை அளவிடற்குரிய சீர் வகையில் அடங்கும். அச்சீர் அனேத்தும் மாச்சீர் இயைவினுக்குட்பட்டதேயாகையால் அது மாயை என்னும் தத்துவத்தைக் கொண்டு காணும். இவ்வாருகக் காணப் பெறும் தத்துவங்கள் ஏழும் வித்தியா தத்துவம் ஆயிற்று. இவ்வாறு ஆன்ம தத்துவமாய் வித்தியா தத்துவமாய் ஆகிய பிரம்ம வித்யா கலேயானது சிவதத்துவத்தைப் பெருஞ் சிறப்பையடைவதையுங் காட்டுதும்.

இடகலே நாடி வன்மெய், பின்கலே நாடி மென்மெய், சுழிமுனே நாடி இடைமை. இம்மூன்று நாடிகளிலும் சந்திர கலே, சூரிய கலே, அக்னி கலே மூன்று கலேகளும் ஒடுங்க இவற்றுள் ஆன்ம தத்துவம் அனேத்தும் ஒடுங்கிக் காணும் அந்நிலேயே சுத்தம் எனப் பெறும். அந்த நிலேயை எழுத்தில் காணும் போது றகரம் இடைகலே நாடி, வன்மெய் : னகரம் பின்கலே நாடி மென்மெய் : ழகரம் சுழிமுனே நாடி இடை மெய். இம்மூன்று நாடியிலும் சஞ்சாரம் செய்யும் சந்திர கலே, சூரிய கலே, மூலாக்னி கலேகள் மூன்று. ஒகரம், எகரம், ஃ ஏனம். இந்த ஆறும் நெருப்பாறில் பசுமலம் அற்ற இடத்தே தோன்றுவதாலும் மாசற்ற தன்மையுடைமையாலும் சுத்த வித்தை எனப் பெறும். இதில் இடைமெய்யாகிய றகரம் மற்ற ஐந்தையும் தன்னினமாய்க் கொண்டு ஈச்சுவர தத்துவமாய் அமையும். இதன் புணர்ச்சி

காரணமாய் தோன்றி நிலை பெறும் எழுத்துக்கள் சாதா நியம் எனப் பெறும். இது மெய்மையாகிய விளைவைத் தருவதால் சத்தி என்று பெயருடைத்தாக ழ கரம் சிவமாகி நின்று விளங்கும் முறைமையால் தமிழே சிவமாய் அமைந்து காணும். இவ்வைந்தும் சிவ தத்துவமாய் பொலிவு பெறும்.

வல்லெழுத்து றகரம். அந்த வல்லெழுத்தின் இனமாகிய வல்லினம் கசடதப; மெல்லெழுத்து னகரம். அந்த மெல்லெழுத்தின் இனமாகிய மெல்லினம் ஙஞணநம; இடையெழுத்து ழகரம். அந்த இடையெழுத்தின் இனமாகிய இடையினம் யரலவள. இது இடையெழுத்தாக இருப்பதால் இடையில் வருகிறது. இப்பொழுது சித்தென்னும் உயிர் சீவனுடைய அந்தத்தை பெறுதலாகிய சைவ சித்தாந்த தத்துவம் முப்பத்தாறும் இன்னின்ன இயலில் உள்ளது என்பதை விளக்கமாகக் கூறினோம். இந்த ஆன்ம தத்துவம், வித்யா தத்துவம் சிவ தத்துவம் ஆகிய மூன்றும் மனம், வாயு, சீவன் ஆகிய முப்பொருள் தொகுதிகளின் மனம் ஆன்ம தத்துவமாகவும், வாயு வித்யா தத்துவமாகவும், சீவன் சிவ தத்துவமாகவும் ஒருங்கிணைந்து ஒடுங்கு நிலை பெறுவது போல் ஈண்டு இவ்விளக்கம் உரைக்கப் பெற்றதென்றுணர்க.

பன்னிரெண்டு எட்டு தொண்ணூற்றுக நின்ற நிலை நீங்கி உபதசச் சாதனம் பெறும் பொழுது

**எங்கே யிருக்கினும் பூரி யிடத்திலே**
**அங்கே அதுசெயின் ஆக்கைக் கழிவில்லை**
**அங்கே பிடித்தது விட்டளவுஞ் செல**
**சங்கே குறிக்கத் தலைவனு மாமே.**

என்றபடி பன்னிரெண்டு விடுவதும் பிடிப்பதுமாகவே அமைய பன்னிரெண்டு, பன்னிரெண்டு 144 ஆகும். அதில் தொண்ணூற்றுறு தத்துவக் கூட்டங்கள் போக எஞ்சியவை நாற்பத்தியெட்டாம். அந்த நாற்பத்தெட்டில் முப்பத்தாறின்

விளக்கம் மேற்கூறினோம். மேலும் அதன் பேருகக் கிடைக்கும் பன்னிரெண்டையும் விளக்கிக் காட்டுகிறோம். அவையாவன தீர்க்கை நான்கு, மார்க்கம் நான்கு, சத்திநி பாதம் நான்கு, ஆகிய பன்னிரெண்டும் இந்த பிரம வித்யா கலையில் வருமாறு. அகரம் முதலாக னகரம் ஈருய்ச் சமைந்த இயமாகிய சமயம் யாவும் பசுமலமென உணர்ந்து நெருப்பாறுள் நீருக்கி சமயத் தீர்க்கை பெற்று புறப்புறத்தை கடந்து புறத்தை சார்ந்து இதில் விசேடம் **நமசிவய** என்னும் ஐந்தெழுத்தே என்றுணர்ந்து அது செப்பமுடைத்தாகிய வீடுபேறு நல்கும் மந்திர சுத்தியாய் அமையக் கண்டு சந்திர சாந்தத்தால் வேகாத தலையமைய விசேடம் தீர்க்கை அகப்புறத்தை அடைந்து மெய்யுணர்வு தோன்றப் பெறலால் **சிவயநம** என்று கலையுணர்வொழிந்த நிர்வாணமடைந்து அந்நிர்வாணமும் தீர்க்கை பெற்று மௌனத்தையடைந்து அகத்துட் சென்று போகாப் புனலுள் அமிழ்ந்து ஏகமாய் மயிர்ப்பால் அம் கொண்ட சிவனுனப் போல அகத்தியம் நிற்கும். இதையே

**சமையம் மலசுத்தித் தன்செய லற்றிடு
மமையும் விசேடமு மரன்மந்திர சுத்தி
சமைய நிருவாணங் கலா சுத்தி யாகும்
மமைமன்னு ஞானமார்க் கம்மபிடேகமே.**

என்று ஆகமம் வலியுறுத்துகிறது. இவ்வாறுய் நின்ற சிவகலையானது குழந்தைகளின் மழலை மொழியாகிய சற்புத்திரமார்க்கத்திலும் **அடிமைச்** செயலில் திளைத்துக் கிளைக்கும் தாசமார்க்கத்திலும், தொல்லுலகில் வரம்பிகந்த காலமாக வழங்கி வரும் சகமார்க்கத்திலும் முன்பு சன்மார்க்கமாய் காட்டிய சிவஞான பிரம வித்யா கலையானது வேறுபாடு உள்ளது போல் தோன்றினுலும் மெய்யுணர்வார்களுக்கு மாறுபாடின்றி உவகையைத் தருவனவாக விளங்கும். மேலும் சத்தத்தின் நீள்கின்ற தன்மையைக் கொண்ட பதமாகிய சத்திநி பாதத்தில் மந்தம்,

மந்ததரம், தீவிரம், தீவிரதரம் ஆகிய மெல்லிசை, வல்லிசை இவற்றின் வேறுபாட்டில் பதமாகிய சொற்கள் வேறுபாடுற்ற போன்று காணப் பெறினும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் இவைகளில் தோன்றும் தோற்றம் மாறுபட்ட நிலே போன்று காணினும் எவ்வாறு ஒருமைப்பாடுடைத்தோ அதே போன்று பிழைபாடாக கருதப்பட மாட்டாதென அறிக.

மனம் உயிரைக் கூடுதல் வேதாந்தாம். உயிர் பிரமத்தை கூடுதல் சித்தாந்தம். சித்து என்பது உயிர். அந்த உயிரானது பிரமத்தை விட்ட அணு விட்ட அணுவாயிருந்து தொண்ணூற்ருறு தத்துவமாகிய அந்தத்தை பெறுவதால் சைவம் சிவனுடன் சம்பந்தமாவதால் என்றபடி சைவசித்தாந்தமாக பிரம வித்யா கலேயென்றும் நம் அகத்தியம் துலங்கிக் காணும். இதுபற்றித் தான் **தமிழ் சிவம் இனிமை எனுந் தனிச் சொல்லாம்** என்றும் தமிழே **சிவமாய் தழைத்து வளரவும்** என்றும் முதுமொழி வழங்கப் பெறுகிறது என்று அறிக.

இவ்வாருகிய தெய்வச் சிறப்பை கொண்டு மிளிரும் தெய்வத்தமிழ் எழுத்துக்களின் உயிர்க்கலே பன்னிரெண்டிற்கும் உருவ இலக்கணம், உருவப் பொருள் இலக்கணம் உருவ ஒலிப் பொருள் இலக்கணம் கூறியென போன்று மெய்யெழுத்துக்கள் பதினெட்டிற்கும் கூறி இதை நிறைவு செய்கிரேம்.

மூலாதாரத்தில் முதலாவதாகத் தோன்றும் எழுத்து **க்**. இது ஆண்பால் எழுத்து ஆகையால் விந்து தலேப்படத் தோன்றுகிறது. அப்படித் தோன்றும் மூலத்தின் வடிவம் சுவாதிட்டானத்திற்கு கிழுள்ளதும் அண்ட வடிவமும் ஆகும். இந்த உருவமே இப்பொழுது வழங்குகின்ற ககாரத்தின் உருவம். மேல் ஒரு சதுரமும் கீழ் ஒரு அண்ட வடிவம் கொண்டது.

ஙகரம் தோன்றுமிடம் சுவாதிட்டானம் ஆகையாலும், இது மெல்லெழுத்தாகையாலும் சுவாதிட்டானத்தின் உருவமாகிய சதுரத்தை தழுவி மணிபூரகமாகிய பிறைகோணத்தை ஒரு

சார்புடைத்தாக கொண்டு தனது மென்மைத் தன்மையால் துவண்டு நிற்கும் வடிவங் கொண்டு விளங்கும்.

இவ்வாறே சுவாதிட்டானத்திற்குரிய சதுரத்தை சிதைவின்றி கொண்டு வலிமை பெற்று நிலேமேலுள்ள உருவகமாகக் கொண்டு சகாரந் துலங்கா நிற்கும். ஞகாரம் அதே இடத்திற் தோன்றும் மெல்லினமாகையால் இருபுறத்திலும் துவண்டு காணும்.

இவ்வாறே மணிபூரகத்தானத்தில் நிலேபெற்று விளங்கும் எழுத்துக்களில் ட காரம் வலமும், இடமும் நெடிலுங் குறிலுமாகிய ரவி மதியின் தன்மையை பெற்று வலிமையுடன் விளங்கும். இந்த வல்லினத்திற்கு இனமாகிய மெல்லினம் **ணகரம்**. இவ்வெழுத்தானது சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்று கலேகளும் தோன்றி விளங்கும் இடமாகிய பிறைகோணத் தானத்தில் இருப்பதால் மூன்று சுழியையுடைய பிறைகோணத் துவட்சி, வடிவமாக விளங்குகிறது. மூலாதாரம் அதை அடுத்துள்ள சுவாதிட்டானம் இவற்றின் உருவத்துடன் மணிபூரகத்திற்குரிய பிறைகோணத்தை சேர்க்கத் தகார வடிவந் தோன்றும். சுவாதிட்டான குறியீட்டுடன் மெலிந்த பிறை கோணத்தை சேர்க்கத் ந கார வடிவந் தோன்றும். தகரத்திற்கு மேலும் ஒரு சிறப்பியல் கூறுகிரேம். சகரத்திற் தோன்றும் வன்மை குறிப்பீடே துவட்சி பெற்ற வடிவம் தகாரமாகவும் தகாரத்தின்ரேன்றும் துவட்சி வடிவாகிய பிறைகோணம் வலிந்து நீட்சி பெறுங்கால் ரகாரமாகவும் தோன்றுவது போலச் சகாரந் தகாரமாக மருவியும் சுவாத்திட்டானத்தில் தோன்றும் சரம் மணிபூரகத் தானத்திலும் மணிபூரகத்திற் தோன்ற வேண்டிய சரம் சுவாதிட்டானத்திற்ரேன்றுவ போன்று இந்த ச-த, த-ச தோன்றிற்றென்று உணர்க.

இவ்வாறே அஞகதத்தானத்தில் தோன்றி நிற்கும் எழுத்துக்களில் பகாரமானது நிமிர்ந்து சிதைந்த முக்கோண வடிவத்தைக் கொண்டு விளங்கும். அஞகதத்தானமானது

முக்கோண வடிவமுடையதாய் இருப்பினும் கலையானது மேற்சென்று அழிவெய்தும் தன்மைக்குரிய ஆதார நிலையமாக இருப்பதைக் குறிக்கவே ப காரத்திற்கு மேற்கூறியவாறு வடிவம் அமைகிறது என்று உணர்க. இதைச் சேர்ந்த மெல்லினமாகிய மகாரம் சிதைந்து விரிந்த தலைப்புடைய முக்கோணத்தின் துவட்சி வடிவமாகக் காணப் பெறுகிறது. முற்கூறியது வல்லினமாகையால் நிமிர்ந்தும், இது மெல்லினமாகையால் துவண்டும் காணப் பெறுகிறது.

நாம் இதுவரையிலும் உயிர்க்கலையெழுத்து பன்னிரெண்டிற்குரிய கலாந்தம் மூவகையும் கூறி ஈண்டு வன்மை மென்மை எழுத்திற்குரிய விளக்கத்தையும் கூறினோம். இவை முறையே பெயரெழுத்து என்றும், வடிவெழுத்தென்றும் கூறப் பெறுகின்றன. உயிர்க்கலைக்கு உள்ள உருவம் செயற்பாட்டியற் காரண உருவமேயன்றி அது உண்மையில் அருவமாகையால் ஒருமைப்பாட்டியல் வேறுபாட்டைக் காட்டும் பொருட்டு உயிர் என்றும், நாதம் என்றும், விந்தென்றும், முதல் எழுத்தென்றும், சார்பெழுத்தென்றும் கலை கலாதி என்றும் பெயரிட்டு வழங்கப் பெறுவனவாய் உள்ள இயற்கையை கொண்டு அகர முதல் உள்ள எழுத்துக்கள் பன்னிரெண்டும் பெயரெழுத்து என்று கூறப் பெறகிறது. இவ்வாறே உயிர்க்கலை நின்றுலவுதற்கு ஆதரமாய் உள்ள மெய்யை உயிர்மெய் என்றும், உயிர்மெய்யாகிய உடம்பின் குறியீட்டு பெயர்களாலும் வழங்கப் பெறுகிறது. இந்த எழுத்துக்கள் தோன்று நிற்கும் ஆதார நிலையங்கள் வடிவமுடையதாய் கட்புலனுக்கு பொருள்படத் தோன்றும் இயற்கையால் வடிவெழுத்தென பெயர் பெறுகிறது. பெயரெழுத்தின் காரணமும் வடிவெழுத்தின் காரணமும்ஈண்டு கூறினோம். அதில் காரணப் பொருள் தோற்றம், உயிர், நாதம், விந்து, கலை, கலாதி இவைகளைக் கொண்டுள்ள பூத பூதியத் தோற்றமேயாம். இவைகளை உருவகப்படுத்தி கூறுங்கால் அருவம், அருவுருவம், உருவம், அகளம், சகளம் என்ற ஐந்து

வகைக்குள் அடங்கும். இவற்றுள் அகள சகளத்தையும் உருவத்தையும் கொண்டுள்ள ஒலிக் கூறுபாடுகளை வடிவெழுத்தென காட்டினேம். இந்த வடிவை ஆதாரமாகக் கொண்டு அதன் இடையில் திரியும் இடையின எழுத்தையும் காட்டுகிறேம். கல் மண் நீர் மூன்றும் மாறுபாடற்ற வடிவம் உடையது தீ வடிவமுடைத்தாயிருப்பினும் சலனத் தன்மையுள்ளது. அந்த இயற்படியே கல்லின் கூருய் உள்ள மூலத்திற்கும் மண்ணின் கூருய் உள்ள சுவாதிட்டானத்திற்கும், நீரின் கூருயுள்ள மணிபூரகத்திற்கும் சலனமின்றியுள்ள வடிவெழுத்தை காட்டி வடிவம் ஒன்றிருப்பினும் சலனமுடைத்தாதலால் தீயின் கூருகிய அனுகதத் தானத்திற்குரிய எழுத்தை அவ்வாறே சலனமுடைத்தாக அமைத்திருப்பதையும் காட்டினேம். இது அக்னியின் கூருகிய நிலையமாகிலும் அவ்வக்னி ஊதையை அசனஞ் செய்யும் உதாசனன் ஆகையாலும் அந்த ஊதையென்ற வாயு இதுகாறும் கூறிவந்த நிலையங்களின் இடையில் திரியும் இயற்கைத் தானும் இடையின எழுத்து எனப் பெறுகிறது. அவ்விடையினமான வாயுவானது சுழிமுனை, இடகலை, பிங்கலை, பூரகம், இரேசகம், கும்பகம், தம்பனம் என்ற ஆறு வகையாக இருக்கும் ஆகையால் இடையின எழுத்து ஆறு வகையாக இருக்கும் யரலவழள.

சுழிமுனையை சார்ந்து நிற்கும் அக்னி கலை வடிவம். அது சார்ந்து நிற்கும் நாடியாகிய சுழிமுனையின் வடிவாகவே அமைவு பெறும் ஆகையால் அதன் வடிவமாகவே **யகாரம்** குறிப்பிடப்படுகிறது. இடகலை பிங்கலை நாடியில் நாடியிற்றிரியும் சூரியகலை, சந்திரகலை ஆகிய காலின் வடிவமாகவே **ரகரம்** அமைக்கப் பெற்றிருக்கிறது. வாயுவை பூரிக்கும் வடிவம் **லகாரமே** யாம். அவ்வடிவத்தையே லகாரத்திற்கு அமைக்கப் பெற்றிருக்கிறது. இந்த பூரகத்தின் செயல்பாடு நித்திரையில் ஓடும்சுவாசத்தின் இயலாகும். திரிபுற்ற ரகரமே லகரமாதலால் திரிபுற்ற நிலையிலுள்ள காலின் இயக்கத்தையே காட்டலாயிற்று

என்று உணர்க. இவ்வாறே இரேசகத்தின் வடிவம் முற்கூறிய செயற்பாட்டு நிலையின் உள்ள சுவாசப் போக்கின் வடிவமே வ காரமாகும். இவ்வாறே வாயு கும்பகம் கொண்டு நிற்கும் வடிவம் ழ காரமாகும். எவ்வாறெனின் பேச்சும் மூச்சும் அற்ற நிலையே கும்பகமாகும். அவ்வாறும் பேசும் எழுத்தை பேசா எழுத்துடன் சேர்த்து எழுதும் போது தோன்றுகின்ற வடிவமே ழ காரமாகும். பேசும் எழுத்தாகிய அகரத்தை அடிப்படையாகக் கொண்டு நிற்கும் பேசா எழுத்தாகிய ம கரமே ழ கரம். கும்பகத்தில் வாசி சலனம் செய்யாமையினுல் தன்மை குறியீட்டு எழுத்தைக் கொண்டு உணர்த்தப் பெறுகிறது.

ஈண்டு கூறிவந்த வரன் முறைப்படியே ள கரத்திற்குரிய வடிவம் வாயு தம்பித்து நிற்கும் வடிவமாக அமையும் – எவ்வாறெனின், சுழியும் காலும் கூடிய வடிவமே ள காரம். சுழி மேல்மூல மண்டலத்தின் வடிவத்தைக் குறிக்கும். அச்சுழியிற் சிக்கிய வாசியின் வடிவத்தை கால் குறிக்கும். இந்த சுழியும் காலும் கூடிய வடிவமே ள காரமாகும். சுழியிற் சிக்கிய கால் நடை கொள்ளாதவாறு தம்பித்தல் போன்று வாயு தம்பனம் பெற்றிருக்கும், வடிவத்தை இது குறிக்கிறது. ஈண்டு கூறியவை யாவும் தன்மையால் உருப் பெற்று விளங்கும் தன்மை எழுத்தென்று உணர்க. இந்த எழுத்துக்கள் யாவும் முன்பு ஏற்படுத்தியவாறே உள்ள உருவத்துடன் இருக்கின்றனவா? ஏதும் திரிபுற்றுள்ளனவா என்பன யாவற்றையும் விளக்குகிறேம்.

க காரத்தின் வடிவத்தைக் கொண்டு விளக்கும் பொருட் பெயர் கலயம் என்பதாகும். அது க கரத்தின் வடிவத்தில் லயப்பட்டு தோன்றுவதாலேயே கலயம் என்று பெயர் வழங்குகிறது. ஆகையால் முதல் நூல் ஆசிரியர் அமைத்த உருவம் திரிபுற்றிலது என்பது தெளிவாகிறது. இந்த எழுத்திற்கு இனமாகிய ங கரத்திற்கு உரிய உருவ இயற்பொருள் வடிவத்தை நோக்கும் போது மூக்கால் ஒலிக்கும் ஒலிக்குறிப்பை கொண்ட ங ககரத்தை நிற்பதினுல் **ஙெண்டி** என்பது கெண்டி என்று வழங்குகிறது. இதன்

உருவமே ஙகரமாகும். இவ்வுருவம் ஙகர வடிவமாகவே இருப்பதால் இவ்வடிவமே முதல் நூல் ஆசிரியர் வடித்த வடிவமே என்பது தெளிவாகிறது.

இவ்வாறே ச கரத்திற்குரிய வடிவ நியதியை நோக்கும் போது சகரத்தினுடைய அகத்தை எடுத்துக் கொண்டிலங்கும் தன்மையுடைமையால் சக்கு என்று பெயர் வழங்கும் பொருள் வடிவம் சகரத்தின் வடிவமாகவே இருக்கின்றமையால் இவ்வெழுத்தும் திரிபுற்றிலது என்பது தெளிவு. இவ்வெழுத்திற்கு இனமாகிய ஞ கரத்திற்கு உரிய வடிவியல் பொருளை நோக்கும் போது ஞகரத்தின் வடிவம் அண்டி நிற்கும் தன்மையால் ஞண்டு என்னும் பெயருடைய கற்கடகமென்னும் உயிர்ப்பிராணி வடிவம் ஞகரத்தை ஒத்தே இருக்கின்றபடியால் அதன் வடிவம் மாறவில்லை என்பது தெளிவு.

இவ்வாறே ட கரத்திற்குரிய வடிவியற் பொருளை நோக்கும் போது ட கரத்தின் வடிவத்தைக் கொண்ட பிராணி முதலை. அது தலையை நிமிர்த்தினாலும், தலையல்லாமல் வாலை நிமிர்த்தினாலும் நீர்மேல் நமக்கு தோன்றும் வடிவம் ட கரத்தையே ஒத்து நிற்கும். அதன் காரணமாகவே அதற்கு இடங்கர் என்ற பெயர் வழங்குகிறது. (ட அங்க அர்) ட கரத்தினுடைய வடிவைக் கொண்ட பிராணி என்பது பொருள். ஆகையால் ட கரம் பழைய வடிவத்துடனேயே தான் வழங்கி வருகிறது. திரிபுற்றில என்பது தெளிவு. இவ்வெழுத்திற்கு இனமாகிய **ண** கரத்தின் வடிவியிற் பொருளை நோக்கும் போது **ண** கரத்தின் வடிவை மிக நுணுகிய கால அளவில் விரைந்து அங்குமிங்கும் அலையும் இயற்க்கைத் தோற்றத்திற் காட்டும் பிராணி தவளை. அதனால் தான் அதற்கு நுணலை என்ற பெயர் வழங்குகிறது. இந்த வடிவம் கொண்டதாகவே ணகரம் வழங்கி வருவதால் இதுவும் திரிபுற்றில என்பது தெளிவு.

இவ்வாறே த காரத்தின் வடிவியல் பொருளை நோக்கும் போது தாது, மூலம், சீவன் என்ற மூவகைப் பொருளில் மூலப்

பொருளே நாம் நோக்கற்கு எளிதாயமை வனயாகையால் மூலப் பொருளின் இயல்பை கூறி அதில் தகாரம் தோன்றுவதை காட்டப் பெறுகிறது.

சீவன் – தன்மை, தாது – படர்க்கை, மூலந்தான் முன்னிலை பொருள். முன்னிலை பொருளே நாம் உணர்த்தற்கு எளியன என்றுணர்க. மூலப் பொருளினந் தோன்றுதற் காதாரமாகிய வித்தும், வேரும், முளையுங்கூடிய உருவமே தகார வடிவம். தகாரத்தின் தலைப்பு முளை, முளை தோன்றும் வித்து தகாரத்தின் நடுப்பாகம். தகாரத்தின் அடிப்பாகம் வித்தினின்று தோன்றும் வேர். இந்த முளை வித்து வேர் ஆகிய வடிவம் தகாரத்தின் வடிவம் வரும்படியான தோற்றமாயமைகின்றதாலேயே அவ்வினங்களுக்கு தாவரம் என்ற பெயர் வழங்கி வருகிறது. இவ்வுண்மையை நோக்கும் போது இவ்வெழுத்தும் ஏற்படுத்திய வடிவினின்றும் திரிபுற்றில என்பது தெளிவு. இந்த தகரத்திற்கு இனமாகிய ந காரத்தின் வடிவியற் பொருளை நோக்கும் போது அவ்வடிவத்தை கொண்ட பிராணி நத்தை. அதன் முதுகு வாய்ப்புறத்துடன் ந கர காலாகவும் அதன் சுழி நகர கொம்பாகவும் அமைந்திருப்பதைக் கண்டு கொள்க. இந்த நகரத்தின் அந்தத்தை கொண்டிருப்பதாலேயே அந்த பிராணிக்கு நந்து என்ற பெயர் வழங்கி வருகிறது. ஆகவே இதன் வடிவமும் பண்டையதே தான் திரிபுற்றிலது என்பது தெளிவு.

இம்முறையே பகாரத்தின் வடிவியற் பொருளை நோக்கும் போது அவ்வடிவப் பொருள் நூலிழை விரியில் தோன்றும். அது காரணம் பற்றியே அவ்வடிவத் தோற்றத்தை தரும் கோலுக்கு பாவு கோல் என்றும், அந்நூலிழை விரிக்கு பாவென்றும் பெயர் வழங்குகிறது. இவ்வழக்கை நோக்குங்கால் பண்டைய அமைப்பில் திரிபுற்றிலது பகரம் என தெளிவு.

இவ்வாறே மகாரத்தின் வடிவியற் பொருளை காணுங்கால் அது தன் உருவத்தைக் கொண்ட பிராணி வண்டு. மகாரச் சுழியாக குண்டை வண்டின் தலைப்பாகமும் மகாரத்தின் பிற்பகுதி

வண்டின் உடம்பாகவும் அமைந்து மகாரத்தின் வடிவத்தை ஒத்திருப்பதாலேயே வண்டிற்கு **மா** என்ற பெயர் வழங்கி வருகிறது. மேலும் வண்டினை அகத்துட் கொண்ட பழத்திற்கு மாம்பழம் என்றும் அம் மரத்திற்கு மாமரம் என்று பெயர் வழங்குகிறது. ஆகையால் மகாரமும் பண்டைய வடிவைக் கொண்டே தான் விளங்குகிறது திரிபுற்றிலது என்பது தெளிவு.

இவ்வாறே யகாரத்தின் வடிவியற் பொருளை நோக்கும் போது அவ்வுருவப் பொருள் சமமான தலைப்பு இரண்டைக் கொண்டு விளங்கும் நடுநிலையையுடையதாய் திரிகை எனப் பெயர் பெற்று விளங்கும். அப்பொருள் யகாரத்தின் வடிவத்தைப் பெற்றிருப்பதைக் குறிக்கவே அதற்கு யந்திரம் எனப் பெயர் இட்டிருக்கிறார்கள். ய கரத்தின் வடிவ நிலையையுடையது என்ற பொருளே யந்திரம் என்பதாகும். யந்திரம் என்ற பெயரில் மந்திரங்களை எழுதியடைக்கப் பெறும் கோணங்கள் வழங்கப் பெறுவன கண்கூடு, தனியாக எழுதினால் எழுத்து. அஃதற்குரிய கோணங்களில் அடைத்தால் மந்திரம். அக்கோணங்களின் தலைப்பில் சூலக்குறியீட்டால் அது யந்திரம். சூலக்குறியில்லையேல் அது யந்திரமாகாது. அச்சூலக்குறி யகார வடிவமேயாகும். ஆகையால் இயற்கையிலும் நடைமுறையிலும் யகாரத்தின் வடிவம் திரிகையை ஒத்ததே என்பது தெளிவு. இவ்வெழுத்தின் வடிவம் தற்காலம் அச்செழுத்தில் சமமான தலைப்பின்றியும் கையெழுத்தில் சமமான தலைப்புடன் திரிபின்றியும் வழங்கி வருகின்றது என்றுணர்க.

இங்ஙனமே ரகரத்தின் வடிவியற் பொருள் நோக்குங்கால் மீனினங்களில் ரகரத்தின் வடிவைக் கொண்டுள்ளது ஒன்றுண்டு. அதற்கு இறால் என்றே பெயர். அதை ராட்டுப் பொடி என்றும் கூனிப்பொடியென்றும் சொல்லுவார்கள். அது ஒன்றுடன் ஒன்று கூடிப் பின்னி பிணைந்து நிற்கும் இயற்கை வடிவினால் ர கர வடிவைக் கொண்டு காணும். அதனாலேயே அதற்கு இறால் என்ற பெயர் வந்தது. இடைகலையின் கலையில் வலமிடமாய்

நடைகொள்ளும் கலையின் எழுத்தே போன்று வலமிடமாகவும் கலையிரண்டும் ஒன்ருவது போலவே பின்னி பிணைந்தும் சிதைவிற் சிறுமையும் கூட்டத்தில் பேராக்கமும் பெற்று வாசியின் இயலைப் பொருந்தியதாக ர கர வடிவத்தைக் காட்டும் பிராணியமைவு பெற்று ர கர வடிவத்தை வலியுறுத்திக்காட்டுமாறு உணரக் கிடைக்கின்றது. மிகுதிபாட்டை குறிக்கும் தன்மையால் மீன் எனப் பெயர் பெற்ற உயிரினங்களில் இது ஒன்றிற்கே மீன் எனும் தனிச்சிறப்பு பெயர் என்பதை வலமிடமாய் ஒன்றையொன்று முன்பின்னுய் பற்றி நின்று சஞ்சரிக்கும் மீனின் வடிவத்தைக் கொண்டு முடியும் கோள் நிலைக்கட்டமாகிய கோள் அக இயைபுடைய கோள்கையை இராசி என்று கூறுவதைக் கொண்டு உணரலாம். இரால் சீர் என்பதே இராசி என்ருகி அதன் தன்மையுடைய மாபெருங்குவியலுக்கும் இராசி என்ற பெயர் வழங்கப் பெறுகின்றதென்றும் உணர்க. இவ்வாறெல்லாம் காணும் போதும் ரகரம் பண்டைய வடிவினின்றும் மாறுதலையடையாமலே வழங்கி வருகிறது என்பது தெளிவு.

முற்கூறிய வண்ணமே வ கரத்தில் வடிவியற் பொருளை ஆராயும் போது சமுத்திரத்தையே கலக்கிவிடும் பேருருவமும் வலிமையும் உடையதாய யானை மீன் என்னும் திமி மீனின் வடிவம் ல காரத்தை ஒத்துள்ளது. ஆம் ஆயினும் காட்சிக்கு அரிதாகும். அது பற்றியே திமிங்கிலம் என்ற பெயர் வழங்குகிறது. (திமி) யானை மீன் (க்) முடிவு (இல்) முடிதற்கில்லாதது (லம்) லகரம். காட்சிக்கு அரிய ல காரம் என்ற பொருள் கொண்டதே திமிங்கிலம் என்ற சொல் விளக்கம் ஆகையால் லகார வடிவமே திமிங்கிலம் என்று தெளியலாம். இதுவும் பண்டைய வடிவிலிருந்து மாறுபட்டதன்று.

இவ்வாறே வகரத்திற்கும் அதன் வடிவியற் பொருள் யாதன ஆராயும் போது நீர் பறவையாகிய தாராவின் வடிவம் வகரத்தை ஒத்துள்ளது என்றும் அது காரணம் பற்றியே வாத்து என்ற பெயர் அதற்கு வழங்குகிறது என்றும் தெளியலாம்.

(வா அத்து – வகரத்தின் எல்லையடைவு உடையது என்பதே வாத்து என்பதன் பொருள்) ஆகவே வ காரமும் அதன் பண்டைய நிலையினின்றும் திரிபுற்றிலதாம் என்பது தெளிவு. வாத்து என்னும் நீர்ப்பறவை நீரில் இரைதேடிச் செல்லுங்கால் நீரில் மூழ்கச் செய்து அமிழ்ந்து செல்லும் இயற்கைத் தோற்றத்தால் அதன் மூக்கும் முதுகும் நீரில் அமிழ்தலையும் வாலும் மேற்காணத் தோன்றும் போது அதன் வடிவம் வகரத்தின் அத்துக்குள்ளேயே அடங்கிக் காணும் என்றுணர்க. ஆகவே இதுவும் திரிபுற்றிலது என்பது தெளிவு.

இவ்வாறே ழ காரத்தின் வடிவியற் பொருளை நோக்குங்கால் இது தமிழ்ச் சிறப்பெழுத்தாகையாலும் எல்லா எழுத்துக்களுக்கும் இல்லாத தனிப்பெருஞ் சிறப்பான ஒலியும் உருவமும் பெற்றுள்ளமையாலும் அவ்வாறே உள்ள வடிவயிற் பொருளை சிறப்புறக் காட்டுதும் காண்க. நித்திலத்துடன் கூடிய சிப்பி வடிவமே ழ கார வடிவம். வாய் திறந்த சிப்பியின் உட்பாகமும் அதில் உள்ள தாளமும் கூடிய வடிவமே மகாரத் தோற்றம். அதன் அடிப்பாகத் தோற்றமே மகாரத்தை ழகாரம் ஆக்கும் பகுதி. இவ்வெழுத்தே முற்றெழுத்து என்பதை முன்பே கூறியுள்ளோம். இவ்வெழுத்தின் வடிவத்தை கொண்டுள்ளமையாலேயே தாளத்திற்கு முத்து என்று பெயர் வந்தது என்றுணர்க. மேலும் இதன் சிறப்பியல், சிப்பி வாய் மூடி இருக்கும் தன்மையால் ஊமை என்று சொல்லப்படும். அவ்வூமையெழுத்தே மகாரம். ஊமைத்தன்மை நீங்கி பேசும் எழுத்தே அகாரம். அவ்வெழுத்தின் வடிவமே மகாரத்தை ழகாரமாக மாற்றும் கீழ்ப்புறப் பகுதி. மேலும் இவ்வெழுத்தானது குற்றியலெழுத்தைக் கொண்டு கூடத்தலைப்பட்டு வராமையின் அவ்வாறே வடிவியலுங் கூறப் பெற்றது. எஞ்ஞான்றும் உயர்ந்தோரைச் சிறப்பு பெயரைக் கொண்டு தான் குறிப்பிடுவது வழக்கே தவிர பிள்ளைப் பெயரைக் கொண்டு குறிப்பிடுவது வழக்கல்லாமையின் அவ்வாறே சிறப்பெழுத்தாகிய ழகரத்திற்கும் அமைந்துள்ளது என

உணரலாம். ஆகவே ழகாரத்தின் வடிவம் பண்டைய அமைப்பினின்றும் திரிபுற்றில.

இம்முறைப்படியே ளகாரத்திற்குரிய வடிவியற் பொருள் யாது என ஆராயும் போது பாம்பு சுருண்டு கொள்ளும் இயற்கை குறிப்பாக ளகாரச் சுழியும் அது படமெடுப்பதற்கு தலையைத் தூக்கி நிற்குமியற்கையாக சுழியை அடுத்த வளைவுப் பகுதியும் காலற்ற தன்மைக் காட்டும் பகுதியாக ஏகபாதம் ஆகிய கோடு கொண்டு பாம்பின் வடிவு ளகாரத்தினிடத்தில் அமைவு பெற்றுக் காண்பதைக் கொண்டு ளகரத்தின் வடிவியற் பொருள் பாம்பென்று தெளியலாம். பாம்பிற்கு வியாளம் என்ற பெயர் ழகாரத்திற்கும் மேற்பட்டதாய் விளங்கும் ளகாரத்தைக் குறிப்பதேயாம். அதனாலாயே பாம்பிற்கு வியாளம் என்று பெயரிட்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது. ஆகையால் ளகாரம் பண்டைய வடிவினின்றும் திரிபுற்றில என்பது காணக் கிடைக்கின்றது.

இவ்வாறே றகாரத்தின் வடிவியற் பொருளை ஆராயுங்கால் இரண்டு ரகரங் கொண்டுள்ள வடிவத்தையுடைய உயிர் பிராணியாகிய கிளிஞ்சல் என்னும் கும்பிடு சிப்பியின் வடிவம் ற கார வடிவம் என்றும் அதனாலேயே அதற்கு ஊரல் என்ற பெயர் வழங்குகின்றதென்று உணரலாம். ஊ – இரண்டு ர – ரகரம், அல் – விகுதி. இரண்டு ரகார வடிவமே றகாரம். இவ்வாறுகத் தெளியும் போது றகார வடிவம் யேற்படுத்தப்பட்ட பண்டைய வடிவினின்றும் மாறுபாடல்ல என்பது தெளிவாகிறது.

இவ்வாறே னகாரத்தின் வடிவியற் பொருளை நோக்கும் போது உருவின்றியே நின்று உருவம் புணர்க்கும் கருவின்றியே நின்று தான் கருவாகும் தன்மையுடைய ன காரத்தை போன்றதாய் உள்ள எல்லா இயல்களையும் உடையது மேகம். எவ்வாறெனின் எல்லா எழுத்துக்களின் ஒலியையும் அறுதியிட்டு அளவு செய்யும் செயற்பாட்டில் உருவின்றியே நின்று உருவம் புணர்க்கும் தன்மையுடைய னகாரம் போல உருவின்றியே

எல்லா பொருள்களிடத்தும் தண்ணளிபொருந்தி நிற்கும் அத்தன்மையுடனின்று விடாமல் தனக்கென ஒரு உருவத்தையுடையதாகவும் இருக்கும். மேலும் நாதம் விந்து என்னும் கருவும் குருவும் உடையதாய் னகார நிற்கும். அவ்வாறே ஒலியும் துளியும் உடையதாய் மேகம் இருக்கும். எடுத்துக்காட்டும் தீர்க்க தாரையும் இரண்டிலும் இருக்கும். இவ்வாறு நாதம் விந்து எடுத்துக்காட்டியல் தீர்க்கதாரை கொண்டதாகிய னகாரத்தின் இயலே முற்றிலும் பொருந்திய பொருளாக மேகம் இருப்பதாலேயே அழியாச் சிறப்பியல் பொருந்திய ககாரத்துடன் னகாரத்தை சேர்த்து அம் விகுதியுடன் கனம் என்ற பெயரை மேகத்திற்கு சூட்டி வழங்கியுள்ளார்கள். ஆகவே னகாரமும் பண்டைய வடிவிற் திரிபுற்றில என்பது தெளிவு.

O விந்து ⌒ நாதம் ( எடுத்துக்காட்டியல் 1 தீர்க்கதாரை. இவையெல்லாம் கூடிய வடிவமே னகாரம்.

இதுவரை எழுத்துக்களின் உருவ இலக்கணம் உருவ பொருளிலக்கணம் வரையறுத்துக் காட்டினோம். இதே போன்று ஒவ்வொரு எழுத்துக்களின் ஒலிகளும் இப்பொழுது வழங்குவன போன்று தான் அன்றும் இருந்ததா அல்லது யாதேனும் மாறுபட்ட நிலையிலிருந்துள்ளதா என்பதையும் உருவப் பொருள் இலக்கணத்தைக் கொண்டு வரையறுத்துக் காட்டுகிறோம் காண்க.

**க** காரம். க கார ஒலி இயற்பொருள் காக்கை. இதனிடம் அவ்வொலி திரிபின்றி ஒலித்தலாலேயே ககாரத்தை தன்னுள்ளாய் கொண்டுள்ளது என்னும் பொருளில் காகம் என்ற பெயர் வழங்கப் பெறுகிறது. இவ்வியலின்படி ககார ஒலி திரிபுற்றிலதென்பது தெளிவு.

**ங** கரம். ஙகாரவொலியிற் பொருள் வண்டு. வண்டினுடைய தொனி இனிய நாதமாக இருப்பது குறித்து நாத எழுத்தாகிய இகரத்தை ங காரத்துடன் சேர்த்து **ஙிமிறு** என்ற பெயரை வண்டிற்கு குறிப்பிட்டிருக்கிறார்கள். **ஙிமிறு** என்ற சொற்

போலியாகவே ஞமிறு என்று வழங்குகிறது. ஙிமிறு என்று சொல்லப்பெறும் வண்டினுடைய ஒலி ஙகார ஒலியாகவே இருக்கிறபடியால் ங கார வொலி திரிபுற்றிலது என்பது தெளிவு.

ச காரம் இதன் ஒலியியற் பொருள் பாம்பு. இது கோபங்கொள்ளும் போது தோன்றும் ஒலிச்சீற்றம் ச காரமேயாம். அதுபற்றியே ச உருப்பம் சருப்பம் என்று பெயர் வழங்குகிறது. உருப்பம் என்னும் கோபநிலமையில் சகாரம் தோன்றுவதால் சருப்பம் என்ற பெயர் வந்தது. ஆகவே சகாரவொலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ஞ காரம். இதன் ஒலி இயற் பொருள் நாய். இதன் உண்மையை அதன் வேதைப்பாட்டு நிலையில் உணரலாம். மற்றயவொலிகள் யாவும் அதன் மனோநிலை வேறுபாட்டியல் காரணமாய்த் தோன்ற பெறுவனவாம். மனோநிலை கெட வேதைப்பாட்டில் தோன்றுவதே அதன் உண்மையான ஒலி. அது ஞகாரமே. அதுபற்றியே அதற்கு ஞானியென்றும் ஞமலியென்றும் பெயர் வழங்குகிறது. ஞகார வொலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ட காரம். இதன் ஒலி இயற்பொருள் எருது. இது மதத்துச் சீற்றம் காட்டும் ஒலி  ட்ட  என்ற வொலியேயாம். அதனாலேயே இதற்கு இடபம் என்ற பெயர் வந்தது. ஆகவே ட காரவொலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ண காரம். இதன் ஒலி இயற் பொருள் தவளை. மெல்லெழுத்தாகிய ண காரத்தை ஒலிக்குமியல் உடைத்தாக இது இருத்தல் பற்றியே இதற்கு நுணலை என்ற பெயர் வழங்குகிறது. ஆகவே இதன் ஒலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

த காரம். இதன் ஒலி இயற் பொருள் நாகணவாய் புள். இது எல்லாவகை ஒலியும் ஒலிக்கும் இயல்புடைத்தாய த்தத்தித்தத்திப் பழகுமியலில் இதனிடம் தோன்றும் ஒலி தகாரம். அதனாலேயே இதற்கு தித்திரி என்ற பெயர் வழங்குகிறது. மேலும்

தத்தகாரத்திற்கே உரியதாக இருத்தலால் தத்தவுரியம் என்ற பெயருடையதாகிய தைத்திரியம் என்னும் இயற்சீர் வேதத்தை இயக்காய வர்க்க இயலில் உட்கிடக்கையின் வெளிப்பாட்டுத் தோற்றமாய் காணும் கலாந்த வகையில் காணும் போது தத்தகாரத்திற்குரிய தைத்தரியம் என்னும் இயற்ச்சீர் வேதத்தை தனதாய்க் கொண்டு ஒலிக்கும் பிராணியாக இந்தச் சிச்சிலி பறவை இருப்பதைக் குறிக்கவே வேதங்களை நன்குணர்ந்த யாக்ஞுவல்கிய முனிவர் ஆசாரிய உரைப்படி கற்ற வேதத்தை கக்கினர். அது அசூச ரூபமாயிருந்தது. அதை வேத தேவதை தைத்திரியப் பட்சி உருவெடுத்து அருந்தி விட்டது என்று வேத விளக்கச் சரியைக் கதை உரைக்கின்றது என்றுணர்க. ஆகவே தகார ஒலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ந காரம். இதன் ஒலியியற் பொருள் மநுடர் நாக்கு. எல்லா உயிரினங்களுக்கும் இருப்பினும் செயற்பாட்டில் ச்சு – ச் – சு என சுவைப்பதற்கு மட்டும் பயன்படும் இயற்பாட்டில் உள்ளதற்குச் சுக்குவாய் (சிருபை) என்னும் உணவுப் பொருளை உறிஞ்சியுண்ணும் செயற்பாட்டின் மிக்க தன்மையுடையதைத் தாரை என்றும் நீட்டவும் முடக்கவும் உடைய தன்மையால் உணவுப் பொருளை அகப்படச் செய்து விழுங்கவுடையும் தன்மையுடையதற்கு தாலு என்றும் இவ்வியல்களெல்லாமும் உடையதாய் அமைந்தது மேலும் தனிச்சிறப்பு ஒன்றின் உடையதாயிருக்கும் குறிப்பியல் பற்றி வல்லெழுத்துக்கள் மூன்றின் மேன்பட்ட தகார சார்பு இன எழுத்தாகிய ந என்றும் சுவை விழை பொறிக்குப் பெயர் வந்துள்ளதில் அந்த ந காரத்தின் சிறப்பியல் எல்லாவற்றையும் பெற்றுள்ள கருவியாகிய நாவை விருப்பப்படி நடைபெறச் செய்யும் இயற்கையுடைமையாலேயே மநுடர்களுக்கு நரன் என்ற பெயர் வழங்குகிறது. ந காரம் நாவைக் குறிக்கின்ற பெயர். ர காரம் அதை நடத்துகின்ற காலாகிய குறியீட்டெழுத்து. அன்–விகுதி. ஆகவே நரன் என்ற பெயர் உடமையுள்ளவனுகை மனிதனைக் குறிப்பிடப்படுகிறது.

ஆகவே நா வலவன் மனிதனே என்றும் ந விற்குரிய ஒலி இயல் பொருளாக மனுடரை குறிப்பிட்ட காரணம் அதுவேயென்றும் இவ்வாருக ஆராயப் பெரும் பொழுது ந கார ஒலியும் திரிபுற்றில என்பதும் தெளிவாகிறது. அ கர முதலாக ன கர ஈருக எல்லா எழுத்துக்களும் அடங்கும். அதனுல் எழுத்துக்களின் பொதுப் பெயர் அன்னம் எனப் பெறுகிறது. ன கரம் தலைப்பட்டு வரும் போது நகரம் மாகவே தான் வரும். ஆகவே எல்லா வகை ஒலியையும் ஒலிக்கும் ஆற்றலுடைய ஒரு உறுப்பை ந என்றும் அதை நடத்துபவனை நரன் என்றும் உரைக்கப் பெறுகின்றது என்றுணர்க. இதன் சிறப்பியல் மிகவும் விரித்தற்பாலது.

ப காரம் : இதன் ஒலி இயற்பொருள் கரடி, உதட்டின் செயற்பாட்டால் பிறக்கும் ஒலி பகாரம். அச்செயற்பாட்டிற்கு சிறந்த பிராணி கரடியேயாம். கரடி உறிஞ்சுவது போல உறிஞ்சும் பிராணி வேறு எதுவும் இல்லை. உறிஞ்சும் ஒலியாகிய பகாரத்தையுடைமையாலும் பகாரத்தை ஒலிக்கும் உதடு பல்லுக்கு அயலாகவுள்ளமையாலும் இதற்கு பல்லம் என்ற பெயர் வழங்குகிறது. பல்–தசனம். அ–எதிர்மறை; அம்–விகுதி. இதுவே பல்லம் என்ருகியது. ஆகவே பகார ஒலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ம காரம் : இதன் ஒலி இயற் பொருள் பசு. பேசாத எழுத்தாகிய மகார ஓசை உடைமையாலேயே வாயில்லாப் பிராணி, வாய் விடாச் சீவன் என்று சொல்லும் வழக்கச் சொல் ஏற்பட்டுள்ளது. ஆயினும் நூல் வழக்கில் பெற்றம் என்ற பெயரும் பசுவிற்கு வழங்கப் பெறுகிறது. ம எனப் பெற்றதே பெற்றம் எனப்படுகிறது. ஆகவே மகார ஒலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ய காரம் : இதன் ஒலியியற் பொருள் களிறு. களிறெழுப்பும் ஒலிச் சிதறிலிற்ருேன்றுவது யகார வொலியே. அது காரணம் பற்றியே அதற்கு யானை என்ற பெயர் வழங்குகிறது. (யஆநேய்) யகாரம் தொடர்புடையது என்பதே

அதன் பொருள். ஆகவே யகாரவொலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ர காரம் : இதன் ஒலியியற் பொருள் குரங்கு. ரகாரவொலியை விரும்புவதும் ரகார ஒலியை ஒலிப்பதும் இதனியற்கை. அதுபற்றியே இதற்கு கோடரம் என்ற பெயர் வழங்குகிறது. கோடமாகிய ஒலி ரகாரமாக இருப்பதை குறிக்கவே கோடரம். ஆகவே ரகாரவொலியும் திரிபுற்றில என்பதுதெளிவு.

ல காரம் : இதன் ஒலியியற் பொருள் அணில். இது அடுக்காக லாகார ஒலியை உண்டாக்கும் இயல்புடையது. இது காரணம் பற்றியே அணில் என்ற பெயர் வழங்கப் பெறுகிறது. ஆகவே இதுவும் திரிபுற்றில என்பது தெளிவு.

வ காரம் : இதன் ஒலியியற் பொருள் வெளவால். இது கனியைக் கவரும் பொருட்டு இரவிற் பறந்து செல்லுங்கால் எழுப்பும் ஒலி வகாரமேயதாம். வெளவுதல் – கவர்தல். வ – அதன் ஒலி. அல் – இரவு. இதுவே வெளவால் என்ருகியது. ஆகவே வ கார ஒலியும் திரிபுற்றில என்பது தெளிவு. வாயால் கௌவிக் கவரும் ஒலி வகாரமே. அச்யெற்பாட்டை உடையது வெளவாலேயாம்.

ழ காரம் : இதன் ஒலியியற் பொருள் வரிக்குயில். இதன் ஒலி வீணை நரம்பை தெரிப்பது போன்றது. குயிலுதல் என்ருல் நரம்புக் கருவியை செயற்படுத்துதல் என்ற பொருள் தரும். அச்செயற்பாட்டொலி ழகாரமே. இது காரணம் பற்றியே குயிலுதல் செய்யும் கருவிக்கு யாழ் என்ற பெயர் வந்தது. இயம்– ஒலி. அது ஆழ்ந்து தோன்றுவது இய ஆழ். அதுவே யாழ் என்ருயிற்று. ஆகவே ழகார ஒலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

ள காரம் : இதன் ஒலியியற் பொருள் உள்ளற் பறவை. இதற்கு உள்ளல் என்ற பெயர் வரக் காரணம் உயிரினத்தில் அடங்கியும் உயிர்ப்புறமா மெய்யினத்தில் ஆதிக்கம் கொண்டும் நிற்கும் இயல்புடையதும் ளப் டப் என்ற ஒலியையுடையதுமாகிய

உள்ளம் போன்ற செயற்பாட்டையுடையதாய் இச் செயலியற்பாட்டை கொண்ட ளகாரம் தன்னிடத்துள்ளதாய்க் கொண்டதை காட்டவே உள்ளான் பறவைக்கு உள்ளல் என்ற பெயர் வழங்குகிறது. ஆகையால் ளகார ஒலியும் திரிபுற்றிலது என்பது தெளிவாகிறது.

ற காரம் : இதன் ஒலியியற் பொருள் புலி. இவ்வெழுத்து வல்லெழுத்து களிற்றலையுடையது. இவ்வெழுத்தொலியை தனதாய்க் கொண்டுள்ள பிராணியாக அது இருப்பதாலேயே அதற்கு வல்லியம் என்ற பெயர் வழங்குகிறது. ஆகவே றகாரவொலியும் திரிபுற்றில என்பது தெளிவு.

**ன** காரம் : இதன் ஒலியியற் பொருள் கின்னரம் பாடும் தன்மையுடையதாய் நீரில் வீழ்ந்தெழும் பறவைக்கும் வீணைக்கும் கின்னரம் என்ற பெயர் வழங்குகிறது. மனிதனுக்கு நரன் என்ற பெயர் வரக்காரணம் முன்பு குறிப்பிட்டுள்ளோம். நரனின் உடைய தன்மையெல்லாம் பெற்றுள்ள அஃறிணை பொருளாக இருக்கும் காரணத்தால் நரம் என்றும், சிதைவும், திரிபும் அற்ற மெய்யையுடைய நரனைப் போல மெய்யுடைத்தாயில்லாமல் அச்செயற்பாட்டை பெற்றிருப்பதால் (க் இன் நரம்) கின்னரம் என்ற பெயர் வீணைக்கும் நீர்வீழ்ந்தெழும் பறவைக்கும் வழங்கப் பெறுகிறது. ன் + அ கூடியதே னகரம். இந்த இரண்டிற்கும் உட்பட்டதே எழுத்துக்கள் அனைத்தும். இவ்வெழுத்துக் கூட்டமே சொல்லிசை அனைத்தும். இந்த னகரத்தை ஒலிக்கும் இயல்புடையதாயொன்றிருப்பின் அது எல்லா ஒலியையும் ஒலிக்கும் இயல்புடைத்தாகவே இருத்தல் வேண்டும். அவ்வாறுன செயற்பாட்டுடைமையால் னரம் என்றும் உயர்ந்த மெய்யினமாக இல்லாமையால் கின்னரம் என்றும் பெயர் வந்துள்ளதென்று உணரும் போது இவ்வெழுத்தும் திரிபுற்றில என்பது தெளிவு.

அகத்தியம் நிறைவுற்றது

உ
*சிவமயம்*

# அகத்திய மாமுனி தோத்திரப் பத்து திருச்சிற்றம்பலம்

அத்தனை அண்ட புவனத் தவரோ டரனுமையை
ஒத்த வொருவன்நீ சென்று சமஞ்செய்யென் றேதவந்த
முத்தமிழ் வேத முனியே சரணம் முரணரியைச்
சித்தரி யாக்கிச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (க)

வாதாபி நீசீர ஞுபி யெனவயிற் றைத்தடவி
ஓதாவி போக அசுரர்செய் தீமை ஒழித்த சித்தாம்
போதா அகத்ய சரணஞ் சரணமுன் பொன்னடிக்கே
சீதா வரியைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (உ)

மாமாயை வல்ல கவுஞ்சா சுரனை மலையாகவே
யாமாறு செய்தயி லாற்பொடி யாகுநாள் அவ்வளவும்
நீமா றுதலின்றி நில்லென் றகத்திய நின்சரணம்
தேமா தவனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ந)

விண்டல முட்ட வளர்ந்து வழியடர் விந்தமலை
மண்டல மாக அழுந்தக் கரம் வைத்த மாதவனும்
தண்டமிழ் தந்த அகத்ய சரணம் சகடுதைத்த
திண்டிற லோனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ச)

அன்று கரகத் தடங்கிய கங்கை யதைச் சீண்டிட
நின்று விரிகா விரியாகச் செய்தோன் நிசவுருவை
என்றும் உலகோர் வணங்க வணங்ககத் தீச்சரண்
சென்றுசேண் நீடோனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ரு)

மேலாம் அகத்திய மாமுனி யேசரண் வேதமொரு
நாலா னதையுங் கவர்ந்து செல் சோமுகனும் அசுரன்
வேலா வலயத் தொளிக்க அடல்செய்து மீட்டுதவச்
சேலா னவனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (சா)

மிகப்பே ருருவாம் விருத்திர னைக்கொல்ல வேண்டுமதற்
ககத்திய நீயரு ளென்னக் கடலைய தாய்க்கடலைப்
புகத்தன் அகங்கையிற் கொண்ட வகத்ய புனிதசரண்
செகத்தையுண் பானைச் சிவமாய் பொதிகைசெய் தேசிகனே. (எ)

**மலையைக் கடலை யுணவாம் அசுரனை மாமுனியாய்**
**நிலையிற் குறுக அடக்கு குறுமுனி நின்றாள் சரண்**
**அலைவா யமுதைச் சுரர்க் கீந்து மாற்றார்க் கமுதவுருச்**
**சிலையாய்நின் ருனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (அ)**

**நீதரன் பாக வணங்கக்கல் லாலின் நிழற்கீழிருந்**
**தோதரன் உள்ளங் களிகூர் அகத்திய வுன்சரணம்**
**மூதரண் மூன்றைச் சிரித்தெரித் தோன்வில் முகத்திலம்பாம்**
**சீதரன் றன்னைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே.(கூ)**

**கரிச தறச்செய் தமிழ்முனியேநின் கழல் சரணம்**
**அரிசெயும் பூசை மலரொன்று கூடிலொ ராயிரமாம்**
**வரிசையிற் கண்மல ராலருச்சிக்க வரன்றருசு**
**தெரிசனத் தானைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ய)**

**அகத்தீச னார்புகழ் ஆரணமாக அமைந்த பத்தும்**
**மிகத்தேசு பெற்றுக் கலைகளெல் லாமும் விளக்கமுறச்**
**சகத்தோர் களுக்குத் தமிழ்வேத நாவலன் சண்முகனை**
**மிகத்தோத் தரித்துத் துதித்தருள் கூடவிளம்பியதே. (யக)**

திருச்சிற்றம்பலம்

ஓம். பசுபதீச்சுர சமானனுயை நம.
ஓம். வாதாபி சீரணுயை நம.
ஓம். கவுஞ்சகிரி காரணுயை நம.
ஓம். விந்தியகிரி பந்தனனுயை நம.
ஓம். காவிரி விரி கரத்தாயை நம.
ஓம். அகத்தியேச் சுராயை நம.
ஓம். சமுத்திர ஆசமணி யாயை நம.
ஓம். குறுமுனீச் சுராயை நம.
ஓம். ஈச்சுரற் கினியாயை நம.
ஓம். சுத்த வித்யா கலாயை நம.

கும்ப முனீச்சுரன் மங்கல நாமம்
சிந்தனை செய்யத் திருவருள் ஓங்கும்

உ
சிவமயம்

அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

# குறிப்பு :

உயிராகிய விட்டணு (உயிராகிய அ)

| | | |
|---|---|---|
| க – பெயர்<br>உ – வரம்பு<br>ௗ – புணர்ப்பு<br>ச – சார்பு<br>ரு – அளவு<br>சா – எண் | எ – பொருள்<br>அ – அஃதல்<br>கூ – தோன்றல்<br>ய – திரிதல்<br>யக – விகாரம்<br>யஉ – கெடுதல் | ஈண்டு கூறப்பெற்ற பன்னிரண்டு கலையாகிய பன்னிரண்டு திருநாமங்களைக் கொண்டு விண்டுவாகிய உயிர் நிற்பது போலவே அகரமாகிய உயிரும் இங்கு கூறப்பட்ட பன்னிரண்டைக் கொண்ட எட்டாக நிற்பது காண்க. அ = 8 |

| அகரம் எட்டெனும் லக்கமாயும் அ ≈ 8 | | |
|---|---|---|
| க | எதிர்மறை | = அ. சரம் |
| உ | சுட்டு | = அ. அது |
| ௗ | ஒலி | = அ அ அ |
| ச | மெய்யுயிரக் கலப்பு | = சரவணம் |
| ரு | ஒத்திற்றிரிபு | = அ அ |
| சா | உணர்விசை | = அ |
| எ | சொல் | = ஆ |
| அ | உடன்பாடு | = அ |

| ஆய் அதங்கொள்ளும் ஆயுதம் ரு | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க | தநுவாகிய மெய் | = | சரம் | – | உ௵ | – | ல்ஃச |
| உ | சங்காகிய வாய் | = | ஆவி | – | ஹ | – | ஃக |
| ௗ | வாளாகிய கண் | = | பூதம் | – | ள | – | ஃல |
| ச | தண்டாகிய மூக்கு | = | அச்சு | – | க்ஷ | – | க்ழ்ஃச |
| ரு | சக்கரமாகிய காது | = | சுரம் | – | ஷ | – | ழ்ஃச |

## நூல்கள் அமைப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 கனி | - | திருப்புகழ் | 4 மா | - | வகுப்பு |
| 2 மலர் | - | அநுபூதி | 5 விளம் | - | அந்தாதி |
| 3 காய் | - | விருத்தம் | 6 நாள் | - | அலங்காரம் |

**துவிதம்** - இராமாயணம்

**கலை** - பிரமகைவருஅத்தம் - பாகவதம் - பூவிடயம்

**நாதம்** - காந்தம் - நாரதீபம் - ஆக்கினேயம்

**யோகம்** - காருடம் - கூர்மம் - வராகம்

**வேதம்** - மார்க்கண்டேயம் - பிரமம் - பதுமம்

**போதம்** - சைவம் - மச்சம் - வைணவம்

**சித்து** - பிரமாண்டம் - வாமனம் - லிங்கம்

**அத்துவிதம்** - மகாபாரதம்

### கும்பக் குறுமுனி மந்திரச் சக்கர அமைப்பு

குத்துச் சதுரங் குறுக்குநீள் கோடுகள்
ஒத்துமுக் கோடுநான் கோர்புறம் நீளுறும்
பத்தும் இரண்டிற் பதிய வயநத்தின்
மத்தியந் தன்னின் மலயம் சிமையமே

மலயஞ் சிமையத்தின் வாழும் அகத்ய
னிலயமாஞ் சக்கரம் நீளும்ஓம் காரத்
திலயத் தடங்க விவைவய நமசி
யவசி வயநம வாக வருமே

வயந மசிசி வயநம ஓம் ஓம்
செய அகத்தீச சிவஅக என்ன
நியமமாம் மந்திரம் ஞேயங் கொளனன்
கியம்பிடச் சித்துக்கள் எல்லாம் வருமே.

**கும்பக் குறுமுனி மந்திரச் சக்கரம்**